# வெள்ளோட்டம்

[தேர் விவரங்கள் உள்ளன]

கு. செ. இராமசாமி, எம். ஏ.,



6-6

# வெள்ளோட்டம்

பாகனேரி ஸ்ரீ புல்வாய்நாயகி அம்மன்
திருத்தேர்த் திருப்பணிச் சிறப்பு மலர்

ஆசிரியர்
கவிஞர் கு. செ. இராமசாமி எம், ஏ.



பதிப்பாளர்
அரு. கதி. இராமநாதன்செட்டியார்
ஆயுள் காப்பீட்டுக் கழகச் சார்பாளர்
பாகனேரி
இராமநாதபுர மாவட்டம்

ARUNACHALANANDA. SWAMI 6-
KAILAS. ASHRAM
BANGALORE-3



ஸ்ரீ காய்ந்தவ கால கணபதி



ஸ்ரீ புல்வாய்நாயகி

## PRIVATE SECRETARY

TO HIS HOLINESS THE JAGADGURU
MAHASWAMIGALAVARU OF SRINGERI MUTT
SARADA PEETHAM
P. O. SRINGERI - KADUR (MYSORE STATE)

sringeri,
27-1-73

மகாசந்நிதானம் சிவகங்கை சமஸ்தானத்தைச் சேர்ந்த பாகனேரி ஸ்ரீ புல்வாய்நாயகி அம்மன் கோவில் புதுத்தேர் வெள்ளோட்டம் நிர்விக்கினமாகவும், சிறப்பாகவும் நடந்து நிலைசேரவேணடுமென்றும், அடுத்த ரதோத்ஸவம் முதல் தொடர்ந்து சாஸ்வதமாக மேற்படி ரதோத்ஸவம் சிறப்பாய் நடந்துவர வேண்டுமெனவும், மேற்படி ரதத்தைச் செய்யப் பொருளுதவி செய்த சிவகங்கை மகாராஜா ஸ்ரீ வேங்கடா சலபதி ராஜாவும், நாட்டார்களும், நகரத்தார்களும் ஸ்ரீ புல்வாய்நாயகி அம்பாளின் பரிபூர்ண அநுக்கிரகத்திற்குப் பாத்திரர்களாகி, நீடுழி நற்சுக வாழ்வு வாழவேண்டுமென ஆசீர்வதித்துப்பதுடன் ''திருத்தேர்த் திருப்பணிச்சிறப்புமலர்'' நன்கு வெளிவர வேண்டுமென்றும் ஆசீர்வதித்து அருளிய மந்தராக்ஷதை, ஸ்ரீ சாரதா சந்திர மௌளீஸ்வரர் பிரசாதம் இத்துடன் அனுப்பியிருக்கிறது.

திருவருட் தவயோக

ஸ்ரீ-ல-ஸ்ரீ **சோமசுந்தர ஸ்ரீஞானசம்பந்ததேசிக**
**பரமாசார்ய சுவாமிகள்**

மதுரையாதீனம், மதுரை,
27-1-73.

25ம் தேதி எழுதிய கடிதம் கிடைத்து ரூபாய் இரண்டு லட்சம் செலவு செய்து புதிய தேர் ஒன்று செய்து அதன் வெள்ளோட்டம் 8-2-73 வியாழக்கிழமை அன்று வைத்திருப்பதை அறிந்து மகிழ்கிறேம். அவ்வமயம் திருத்தேர்த் திருப்பணிமலர் ஒன்று வெளியிடத்தீர்மானித்திருப்பது பாராட்டுக்குரியது.

புண்ணியச்செயலில் இரண்டுவகை உண்டு. ஒன்று பசு புண்ணியம். அது மனிதர்களுக்கும், இதர ஜீவராசிகளுக்கும் செய்வது. மற்றது பதிபுண்ணியம். அது தெய்வத்திற்குச் செய்வது. பசுபுண்ணியத்தைவிட, பதிபுண்ணியம் எத்தனையோ மடங்கு சிறந்தது. ஆனதால் அந்தத் திருத்தேர்த் திருப்பணியில் பங்கெடுத்துக்கொண்ட பக்தர்களது அறப்பணிகளையும் பாராட்டுகின்றேம். அதில் ஒல்லும்வகையால் ஈடுபட்டு வெற்றிகரமாக முடித்துக்கொடுத்த அன்பர்கள் அனைவருக்கும் சிந்திதமனோரத சித்தியும், திடகாத்திரமும், தீர்க்காயுளும், அஷ்டஐச்வரிய ஆதிக்கமும், நித்திய மங்கள குரு கடாட்சமும் மேன்மேலும் பெருகத் திருவருள் பாலிக்குமாறு எல்லாம் வல்ல எம் அங்கயற்கண்ணி பங்கனும் ஆலவாய் அண்ணலைப்பிரார்த்தித்து ஆசீர்வதிக்கிறேம்.

ஸ்ரீ ஞானசம்பந்ததேசிகர்.

தவத்திரு. குன்றக்குடி அடிகள்,

குன்றக்குடி. 31—1—73

அன்பிற் சிறந்த இராமனுதன் அவர்களுக்கு எல்லா நன்மைகளும் பெருக அண்ணுமலை அண்ணலின் திருவருளைச் சிந்தித்து வாழ்த்துகின்ருேம்.

கடிதம் கிடைத்தது. மிக்க மகிழ்ச்சி. பெரும் பொருட் செலவில் ஸ்ரீ புல்வாநாயகி அம்மனுக்குத் திருத்தேர் செய்திருப்பதறிந்து பெரிதும் மகிழ்ந்தோம். திருத்தேர், தமிழர் சமயக் கலையுணர்விற்குச் சிறந்த எடுத்துக் காட்டாகத் திகழ்வது. தெய்வக் கலைப்படைப் பாக விளங்குவது. இத்தகைய தெய்வத் திருப்பணியில் ஆர்வமுடன் ஈடுபட்டுழைத்த தங்களுக்கும், வாள் கோட்டை நாட்டார்கள் - நகரத்தார்கள் - அன்பர்கள் அனைவருக்கும் நமது உளம்நிறைந்த பாராட்டுக்களைத் தெரிவித்துக்கொள்கின்ருேம்.

திருத்தேர்த் திருப்பணிமலர் தெய்வமணங் கமழ்ந்து மக்களுக்குப் பயனளிக்கத் தக்கதாக மலரவும், புதுத் திருத்தேர் வெள்ளோட்டத் திருவிழா இனிதே நிறைவெய்தவும் திருவருளைச் சிந்தித்து வாழ்த்துகின் ருேம்.

என்றும் வேண்டும் இன்ப அன்பு.

— அடிகளார்.

**கோவிலூர் ஆதீனம்,**
கோவிலூர்.

சோவிலூர்
27-2-1973.

பாகனேரியில் சாந்நித்தியம்பெற்று விளங்கும் தேவி ஸ்ரீபுல்வாநாயகி அம்மனுக்குப் புதிதாகத் திருத்தேர் அமைத்திருப்பதும் வருகிற 8-2-1973ல் மேற்படி தேர் வெள்ளோட்ட விழா நடைபெறவிருப்பதும் கேட்டு மிக்க மகிழ்ச்சி.

'மஹாரதம்' என்பது பிரபஞ்சத்தின் சின்னமாக விளங்குவது. இறைவன் அதன் நாயகனுக இருந்துகொண்டு நடத்துவிக்கிருன் என்பதே தேரோட்டத்தின் கருத்தாகும். மஹாரதத்தில் பிரபஞ்ச இயக்கங்களேக் குறிக்கும் சகல கலேச்சின்னங்களும் நுட்ப வேலேப்பாடுகளுடன் காணப்பெறும். அருங்கலேகள் ஆதரிப்பாரின்றி மறைந்துவரும் இந்நாளில் பெரும் செலவில் புதிதாக மஹாரதம் அமைக்க முன்வந்தது பெரிது பாராட்டுக்குரியது.

தேரோட்டம், ஒற்றுமை, சமத்துவம், சகோரத்துவம், விடாமுயற்சி ஆகியவைகளின் சின்னமாக விளங்குவது.

'தேர் நிலேக்கு வந்துவிட்டது' என்ருல் பக்தர்கள் மனம் நிறைவடைகின்றது. ஒரு பெரிய காரியம் வெற்றிகரமாக நிறைவெய்திய மனக்களிப்பு உண்டாகிறது. தேவி புல்வா நாயகியின் திருவருள் துணேகொண்டு செயற்கருஞ்செயலில் ஈடுபட்டு வெற்றியுடன் மிகச் சிறப்பாக நிறைவெய்த உதவிய எல்லோருக்கும் எமது பாராட்டுக்கள் உரியன.

இராமநாதஞானதேசிகர்.

**ஸ்ரீ திருச்சி சுவாமிகள்,**
''கைலாஸ ஆஸ்ரமம்''
கெஞ்சேனஹள்ளி — பெங்களூர்.
பெங்களூர் - 560039 — 29–1–73

தாங்கள் எழுதிய கடிதம் கிடைத்தது. பாகனேரி புல்வாநாயகி அம்மன்மஹாரதம் நாட்டார்களாலும் நகரத்தார்களாலும் பொருள்உதவி செய்யப்பெற்றுப் பூர்த்தியாகி வெள்ளோட்ட விழாவும் வெகு சிறப்பாக நடைபெறுவது பற்றி பெருஞ்சந்தோஷம் அடைகிறோம்

பாகனேரிக்கு இருபது ஆண்டுகளுக்கு முன் முதலாக பக்தர் உடையப்பன் அம்பலம் என்பவர் எங்களை அழைத்துக்கொண்டு போயிருக்கிறார். பாகனேரி என்றால் இந்த நினைவு வந்து கொண்டிருக்கிறது.

இவ்விதமான தர்மங்கள் மென்மேலும் வளர்ந்து சாஸ்வதமாக நடந்து வரவும் அதைச் செயலாற்றும் யாவரும் நீடுழி நல்வாழ்வு வாழவும் ஸ்ரீ லெட்சுமி சரஸ்வதி சமேத ஸ்ரீ ராஜராஜேஸ்வரி அப்பாள் அனுக்கிரகிக்க வேண்டுமென வாழ்த்தி அருளிய ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி பிரசாதம் இத்துடன் அனுப்பியிருக்கிறது.

வேணும்,
ஸ்ரீ ராஜராஜேஸ்வரி துணை.

திருமுருக கிருபானந்தவாரியார் பம்பாய்,
31-1-73.

முருகா

வாழ்த்து
நேரிசை வெண்பா

சீரார்ந்த செல்வம்
திகழ்பாக னேரியும்
நாரார்ந்த சீர்புல்வாய்
நாயகியும் - ஏரார்
திருத்தேரும் வாழி
திருவேல் இறையாம்
ஒருத்தனரு ளாலே உவந்து.

அன்பன்,
கிருபானந்தவாரியார்.

*Dr. RAJAH*
*SIR MUTHIAH CHETTIAR*
*of Chettinad*

Chettinad House, Adyar,
Rajah Annamalaipuram P. O.
MADRAS-28.

உ
சிவமயம்

பாகனேரி ஸ்ரீ புல்வாய் நாயகி அம்மனுக்கு அவ்வூர் நாட்டார்கள், நகரத்தார்களாலும், திரு. அரு. கி. கிருஷ்ணன் செட்டியார்அவர்களின் அரிய முயற்சியாலும், பெரும்பொருட் செலவில் செய்திருக்கிற புதுத்தேரை 5—2—1972-ல் கண்டு களிப்புற்றேன். கண்ணையும், கருத்தையும் கவர்கின்ற, கலைஅழகுச் சிற்பங்கள் நிறைந்த புதுத்தேரின் மகாரத "வெள்ளோட்ட விழா" சிறப்பாய் நடைபெற இறைவன் அருள்புரிவாராக.

"திருத்தேர்ச் சிறப்பு மலர்" கலைமணம் கமழும் மலராக வெளிவரவும், பாகனேரி நாட்டார்கள், நகரத்தார்கள் அனைவர்களும் அம்மனின் அருளால் எல்லா நலனும் பெற்று, என்றென்றும் இனிதே வாழ இறைஅருளைப் பிரார்த்திக் கிறேன்.

*மு. அ. முத்தையாசெட்டியார்*

கம்பன் அடிப்பொடி சா. கணேசன்,
காரைக்குடி.

ஓம்

(தங்கல்)
சென்னை-28,

பாகனேரி, 'புல்வாய் நாயகி' என்னும் பெயருடன் அருள் புரியும், கலையூர் கன்னியாம், கொற்றவைக்கு நாடும், நகரமும் கூடிப் பெரும்பொருட் செலவில் பெருந்தேர் அமைத்து வெள்ளோட்டம் என்னும் தேர்மங்கலம் செய்யும் செய்திகேட்டு மகிழ்ச்சியடையும் பல்லோருள் யானும் ஒருவன்.

இந்த அரிய பணியில் ஈடுபட்ட பெருமக்களையும், அறக் கொடை புரிந்த நல்லோர்களையும், இந்தப் பெருந்தேரை ஆக்கிப் படைத்த 'ரதச்சக்ரவர்த்தி'யின் மகனுன மாலை கண்டான் லெட்சுமண ஸ்தபதியையும் மனம் களிக்க வாய் மணக்கப் பாராட்டி வாழ்த்துகிறேன்.

எங்கும், என்றும், இத்தகைய நல்லறப் பணிகள் வளர, வளர்ந்திருக்க அன்னை கொற்றவை அருள்புரிய வேண்டி அவளடி பரவி நிற்போமாக!

அன்பன்,
கம்பன் அடிப்பொடி,
சா. கணேசன்.

K. KAMARAJ

8 THIRUMALAI PILLAI ROAD
T. NAGAR. MADRAS-17

31-1-73

அன்புள்ள நண்பருக்கு,

தங்கள் கடிதம் கிடைத்தது. புல்வாநாயகி அம்மன் தேர்த்திருப்பணி விழா நடைபெறவிருப்பது அறிந்து மகிழ்ச்சி.

தேர் வெள்ளோட்ட விழாவையொட்டி வெளியிடும் சிறப்பு மலர் சிறப்புற அமைய என் வாழ்த்துக்கள்.

தங்களன்புள்ள,

காமராஜ்.

---

ம். சு. முருகேசன், பி. ஏ., பி. எல்.,
துணை ஆணையாளர்,
இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை.

மதுரை
29–1–73

பாகனேரி புல்வாநாயகி அம்மன் ஆலயத்துக்குத் தேர்த்திருப்பணி செய்து திருப்பணி மலர் ஒன்றும் வெளியிடுவதைக் கேட்க மெத்த மகிழ்ச்சி. திருப்பணி செய்வதே சிரமம்; அதிலும் தேர்த்திருப்பணி என்பது அண்மையிலே கண்டிராத ஒன்று, இரண்டு இலட்சம் ரூபாய் செலவில் மகாரதம் செய்து முடித்துவிட்டார்கள் என்பது வரலாற்றில் பதியப்படவேண்டிய செய்தி. இதில் ஈடுபட்ட ஒவ்வொருவரும் பெருமைகொள்ளக் கூடிய செயல் இது. அவர்களுக்கு எல்லாம் நம்முடைய வாழ்த்துக்களும் பாராட்டுதல்களும். இத்திருப்பணியில் ஈடுபட்ட அனைவருக்கும் புல்வாநாயகி அம்மன் அருள் பாலிப்பாளாக.

இப்படிக்கு,

ம. சு. முருகேசன்,

29-1-73.

ஏ. கே. செட்டியார்
ஆசிரியர் 'குமரி மலர்'

சென்னை-8
30-1-73

பாகனேரி ஸ்ரீ புல்வாநாயகி அம்மன் புதிய திருத்தேர் வெள்ளோட்டம் சிறப்பாக நடைபெறவும், நாட்டார்களும் நகரத்தார்களும் ஒற்றுமையாய் இருந்து பல நல்லநங்களைச் செய்யவும் தேவி புய்வாநாயகி ஈஸ்வரி திருஅருள் புரியப் பிரார்த்திக்கின்றேன்.

ஏ. கே. செட்டியார்

---

தமிழ்க்கடல், சிவமணி
சிவம் பெருக்கும் சீலர்
ராய. சொக்கலிங்கன்

காரைக்குடி-1.
29-1-73

அன்புடையீர்,

தங்கள் மடல் கிடைத்தது. தங்கள் ஊர், புல்வாநாயகி அம்மனுக்குச் சிறந்ததொரு தேர் செய்திருப்பது பற்றி மிக்க மகிழ்ச்சி, தேர்த்திருப்பணியில் பங்குகொண்ட அன்பர்கள் அனைவருக்கும் அம்பிகை நல்லருள் சுரப்பாளாக. திருத்தேர் வெள்ளோட்ட விழாவை ஒட்டி, மலர் வெளியிடுவது குறித்துப் பாராட்டுகிறேன். மலர் பொலிவுற்று மணம் பரப்பி ஒளிர்வதாக.

அன்புள்ள,
ராய. சொ.

AL. AR. SOMANADHAN CHETTIAR
Zamindar of Devakottai
Hereditary Trustee
Rameswaram Devasthanam.

DEVAKOTTAI
31-1-73

அன்புடையீர்,

தேவி ஸ்ரீ புல்வாநாயகி அம்பாளுக்கு நாட்டார்களாலும் நகரத்தார்களாலும் பெரும்பொருட் செலவில் மகாரதம் கைங்கர்யமாக செய்துவைக்கப்பெற்று அதன் வெள்ளோட்டவிழா 8-2-73 தேதியன்று நடைபெறவிருப்பது அறிந்து மிகவும் மகிழ்ச்சியுறுகிறேன். பன்னெடுங் காலமாகாவே பாரம் பரியமாகவே பராசக்தியாகதேவி புல்வானுயகி அம்பாளை வழிபட்டு வரும் மக்களுக்கு நற்காரியங்கள் பல செய்தருளுகிருள். அம்பாளுக்கு புதுத்தேர் செய்து அற்பணித்த நாட்டார்களையும் நகரத்தார்களையும் பாராட்டக் கடமைப்பட்டுள்ளேன். தேவியின் பணியை மக்கள் என்றும்போல் செய்துவந்து பராசக்தியின் திருவருளுக்கு பாத்திரமாகுமாறு ஸ்ரீ இராமனுதஸ்வாமியை ப்ரார்த்திக்கிறேன்.

தங்கள் அன்புள்ள,
அள. அரு. சோமநாதன் செட்டியார்.

அழகாபுரி மெ. உடையப்பன், பி. காம்.
மதுரை வங்கி, பாகனேரி.

புல்வாய் நாயகி துதி.

உலகுய்ய அருள்விளங்கும் உத்தமியை
ஒப்பரிய ஒளிவி ளக்கை
நிலஞ்செழிக்க வளஞ்சிறக்க நீர்மல்க
நெல்நிறைய நீள்நி லத்தில்
இலமொழிய அறந்தழைக்க என்றென்றும்
எமைக்காக்கும் எழில்வி ளக்கை
நலம்வளர்க்கும் அருள்புல்வாய் நற்ருயை
நாம்வணங்கிப் பணிவோம் நாடி.

கற்புத்தீ நாச்சாளைக் கருணையுடன்
அணைத்திருக்கும் கற்ப கத்தை
சிற்பமிகத் தேவரெலாம் காமுற்றுச்
சிந்தையுறச் சித்தி ரத்தேர்
அற்புதத்தை அவளருளால் அன்பருள்ளம்
படைத்தளிக்க அடைந்தி ருக்கும்
பொற்பதத்தைப் புல்வாயின் திருவருளைப்
புகழ்ந்துருகிப் பணிவோம் போற்றி.

அழகாபுரி. மெ. உடையப்பன்,

## அணிந்துரை

*மேன்மைதங்கிய*
*சிவகங்கை மன்னர்*

பாகனேரியில் கோயில் கொண்டிருக்கும் ஸ்ரீ புல்வாய் நாயகிக்கெனத் திருப்பணிக்குழுவினரால் புதிதாகச் செய்யப் பட்டுள்ள திருத்தேரின் வெள்ளோட்ட நாளன்று, மலரொன்று வெளிவருவதறிந்து மகிழ்கிறேன்.

ஈட்டிய பொருளேயெல்லாம் இறைப்பணியில் செலவிட்டு அறம் நிலேநாட்டிய சான்றேர் பலர் வாழ்ந்த நாடு இது. சம்பத்தை இழந்தாலும் தெய்வ சம்பந்தத்தை இழக்காதவர் கள், மண்ணில் நல்ல வண்ணம் வாழ்ந்து காட்டிய நாடு இது. பொன்னும் பொருளும் போகமும் வேண்டாது, அன்பும் அறனும் அருளும் வேண்டிய நாடு இது. அதற்காகவே மனிதப்பிறவியும் வெண்டுவதே என்று மகிழ்ந்து பாடிய நாடு இது. அண்ணுந்து பார்க்கவைக்கும் ஆலயக் கோபுரங்கள், இத்திரு நாட்டில்வாழ்ந்து காட்டிய பெருமக்களின் உள்ளத்து உயர்வைத்தான் இன்றளவும் உலகுக்குணர்த்திக் கொண்டி ருப்பதாக நான் கருதுகிறேன்.

நம் முன்னேர்கள் நடத்திய இத்தகு அருளற வாழ்க்கை, முற்றும் அற்றுப்போய்விடவில்லே என்பதை அங்கங்கே நடக்கும் ஆலயப்பணிகள் நமக்கு நினேவூட்டுவதோடு, தமிழரின் இறைநெறி வாழ்க்கைக்கு இறுதியே இல்லே என நம்பிக்கையும் ஊட்டுகிறது. பாகனேரியில் உள்ள நகரத்தா ரும் நாட்டாரும் அன்னே புல்வாய் நாயகிக்கென்று திருத்தேர் அமைத்த செய்திகேட்டு, அந்த நம்பிக்கையை நான் அதிகம் அடைகிறேன். திருப்பணிக்குழுவினரை மனமுவந்து பாராட்டுகிறேன்.

சிறப்பாக இத்திருத்தேர் செம்மைபெறப் பல வகையிலும் முன்னின்று உதவிய திரு. கிருஷ்ணன் செட்டியாரை நாம் எவ்

வளவு புகழ்ந்துரைத்தாலும் தகும். பசு உராய்வதற்கென்று நாட்டிய நடுகல்லிலும், பெயர் பொறிக்கும் 'பெயராசை பிடித்தோர்' வாழும் உலகத்தில் திரு, கிருஷ்ணன் செட்டியார் போன்றவர்களை வார்த்தைச் சுஞ்சம் இல்லாமல் பாராட்ட வேண்டிய அவசியத்தை நான் உணர்கிறேன்.

இந்த நூலை இத்துணை அழகோடு வெளியிட ஆவன செய்த திரு இராமநாதன் செட்டியார் 'அவர்களுக்கும் நமது பாராட்டுக்கள்.

தண்ணளி சுரந்தருளும் தாமரைக் கண்கள் கொண்டு, எண்ணரிய புகழ்கொண்ட பெண்ணரசி புல்வாய் நாயகியின் மகிமையும், அவள் தேரேறும் சிறப்பும் புலப்பட, பண்ணிலகு தீஞ்சொல் பசுந்தமிழால், படிப்பார் மனம் நெகிழுமாறு இந் நூலை எழுதியவர் எங்கள் கல்லூரித் தமிழ்விரிவுரையாளர் இராமசாமி என்பதறிந்து மிகவும் மகிழ்கிறேன். தமிழோடு தொடர்புடைய கவிஞர் இராமசாமி தெய்வத்தோடு தொடர் புடைய தெய்வத் தமிழை அருட்செல்வம் பரப்பும் நூல்களை ஆக்கப் பயன்படுத்துவதறிந்து பாராட்டுகிறேன். 'உன்னைச் சரணடைந்தேன்' என்னும் பாட்டுநூல் மூலமாகத்தன்னை இந்நூற்ருண்டின் தாயுமானுராக அறிமுகப்படுத்திக் கொண்ட கவிஞர் இராமசாமி, இந்நூல் வழியாக 'வசனநடை கைவந்த வல்லாள'ராகவும் விளங்குகிருர். அவருக்கு நம் வாழ்த்துக்கள்.

சிவகங்கை,
7-2-73.

**து. ச. கார்த்திகேய ரராஜா**
சிவகங்கை மன்னர்

## முன்னுரை

கு. செ. இராமசாமி, எம். ஏ..

கோயில் விழாக்களில் யானை, குதிரை, ஆடு, சிம்மம், ரிஷபம், மூஷிகம், காமதேனு, மயில், அன்னம், கருடன், பூதம், வேதாளம், கற்பகத்தரு, கயிலாயம், பலலக்கு, கேடகம், சப்பரம், சந்திர—சூரிய பிரபைகள், ஐந்துதலை நாகம் என வகையான ஊர்திகளையும், வாகனங்களையும் பயன்படுத்தி வருகிறோம். இந்தவாகனங்கள் ஒவ்வொன்றும்,ஒவ்வொருவகையான சிறப்புடையவை. இவைகளுக்கு இல்லாத தனிச்சிறப்பும் பெருமையும் உடைய வாகனம் தேர்.

தேரின் பீடங்கள் மந்திர — யந்திர சாத்திர அடிப்படையில் வெவ்வேறு கோணங்களில் அமைகின்றன. பொருத்தப்படும் படிமங்கள் புராண இதிகாச வரலாற்று நிழ்ச்சிகளை விளக்கக் கூடியவை. சமய சாத்திர தத்துவ உண்மைகளைப் பாமரர்களும் புரிந்துகொள்ளுமாறு இவைகள் சித்திரித்துக் காட்டுகின்றன· ஊர்ந்துசெல்லஉதவும் சக்கரத்திலிருந்து உச்சியில் பொருத்தப் பட்டிருக்கும் கலசம் வரையில் ஒரு முறை தேரைக் கூர்ந்து நோக்குவோம்: இது திருக்கோயில் போன்ற வடிவம் உடையதாக அல்லவா இருக்கிறது?

தெய்வம் தேரேறி வருவது திருக்கோயிலிலேயே உலா வருவது போன்றது.

ஏனைய பரிவார தெய்வங்களுடன் தானிருக்கும் கோயிலோடு தெய்வமே நம் வாசலுக்கு வருவதாக அமைவது தேரோட்டம். தேரோட்டம் இல்லாத திருவிழாவில் உயிரோட்டம் இருப்பதில்லை.

சைவம், வைணவம் போன்ற அகச்சமய விழாக்களில் மட்டு மல்ல, பௌத்தம், சமணம், கிறித்தவம் போன்ற புறச்சமய விழாக்களிலும் தேரோட்டம் இடம் பெற்று வருகிறது.

பாகனேரியில் திருக்கோயில் கொண்டு விளங்கும் ஸ்ரீ புல்வாய் நாயகி நீண்ட காலமாகத் தேரோட்டம் கண்டு வருகிருள்.

பழையதேர் பழுதான நிலையில் புதியதேர் செய்யும் எண்ணம் தோன்றவே ஒரு திருப்பணிக் குழு அமைக்கப்பெற்றது.

கடந்த முப்பது மாதங்களாக அரிதின் முயன்று ஒரு புதிய தேரைத் திருப்பணிக்குழு உருவாக்கியது.

புதிய தேருக்கு 8—2—83-இல் வெள்ளோட்டம் பார்க்க நாள் குறித்தார்கள்.

வெள்ளோட்ட விழாவை நினைந்து போற்றும் வகையில் ஒரு சிறப்புமலர் வெளியிடும் எண்ணத்தோடு ஆயுள் காப்பீட்டுக் கழகச் சார்பாளர் பாகனேரி திரு, அரு. கதி, இராமநாதன் செட்டியார் அவர்கள் எங்கள் பேராசிரியர் திரு. மீ. இராசேந் திரன் அவர்களை அணுகினர். பேராசிரியர் இவரை என்னிடம் ஆற்றுப்படுத்தினர்.

திரு. இராமநாதன் செட்டியார் கொடுத்த ஒரு சில குறிப்புக் களோடும், பாகனேரியில் ஒரு பகற்பொழுதைச் செலவழித்துச் சேகரித்த விவரங்களோடும் மிக விரைவாக இந்த நூல் எழுதப் பெற்றது.

சொல்லவேண்டிய செய்திகள், நூலை எழுதி வரும்போது பெரு மக்கள் பலர் உதவிய குறிப்புக்கள் இன்னும் நிறைய உள்ளன. போதிய நேரமில்லாததால் கிடைத்தசெய்திகள் அனைத்தையும் நூலில் சேர்க்க இயலவில்லை.

சிறப்பு மலர்கள் தமிழுலகத்திற்குப் புதியவை அல்ல. அன்ற லர்ந்து அன்றே வாடி உதிரும் மலராக இல்லாமல், நின்று மணம் வீசும் மலராக, நிலைபேறுடைய மலராக விளங்க

வேண்டும் என்ற ஆசையோடு இதனை உருவாக்கியுள்ளோம். அன்னுடம் தமக்கிருக்கும் பல்வேறு பணிகளுக்கிடையே சிவகங்கை அரசர் மேதகு கார்த்திகேய ராஜா அவர்கள் இந் நூலுக்குத் தமக்கே உரிய கவிதை நடையில் அழகான அணிந் துரை வழங்கியுள்ளார்கள். அவர்களின் அணிந்துரையால் இந்நூலின் தகுதி—மிகுதிப்படுகிறது: உச்சியிலிருந்து தேரின் அழகை உயர்த்திக் காட்டும் கலசத்தைப் போல, இந்நூலின் முகப்பிலிருந்து சிறப்பிப்பது அரசர் அவர்களின் அணிந்துரை யாதலால் அவர்களுக்கு என் மனமுவந்த நன்றியைத் தெரி விக்கக் கடமைப்பட்டுள்ளேன்.

திரு. அரு.கதி. இராமநாதன் செட்டியார் இதனைப் பதிப்பித்து வெளியிடுகின்றார். இவ்வளவு ஆர்வமும், ஆள்வினைத் திறனும் உடைய பதிப்பாளர் தமிழகத்தில் அதிகம் இல்லை என்றே சொல்லலாம். வெள்ளோட்ட தினத்திற்குள் நூலை வெளிக் கொணரும் ஆர்வத்தில் சக்கரமாகச் சுழன்று பணியாற்றி யுள்ளார்.

இது போன்ற நூல்களை ஒரு பஞ்சாங்கத்தைப் போல, புகை வண்டிக் காலஅட்டவணையைப் போல அச்சாக்கி விடுவார்கள். ஆனால் பதிப்பு வேலைகளில் நேரடியாக ஈடுபட்டு உதவிய பேராசிரியர் மீ. இராசேந்திரன் அவர்கள் அக்கரைச்சீமை களில் பதிப்பிக்கப்படும் ஆங்கிலப் புத்தகங்களைப் போல இதனை உருவாக்கித்தந்துள்ளார்.

நின்று பார்க்கவைக்கும் பல நிழற்படங்கள் நூலை அலங்கரிக் கின்றன. பரமக்குடி 'ராயல் ஸ்டுடியோ' உரிமையாளர் திரு. இராம. சுப்பிரமணியன் அவர்களால் கலைநுணுக்கத் தோடு எடுத்துத் தரப்பெற்ற இந்தப் படங்கள் தேரையும் தேரோட்டம் நிகழும் ஊரையும், தொடர்புடைய பெருமக்கள் — கலைஞர்களையும் வாசகர் கண்முன் கொண்டு வந்து நிறுத்தக் கூடியவை.

குறிப்பிடத்தக்க பெரியவர்கள் நூலை வாழ்த்தியிருக்கிறார்கள். சிவகங்கை ஊர்வசி அச்சகத்தார் மிகவும் குறுகிய காலத்தில் அழகிய முறையில் இதனைப் பதிப்பித்துத் தந்திருக்கிறார்கள்.

நூலாசிரியன் என்ற முறையில் இவர்கள் யாவர்க்கும் எனது நெஞ்சுகந்த நன்றியைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

பாரிசாதமும், பன்னீர்ப்பூக்களும் மணம் வீசும் தேவியின் திருவடிகளில் இந்தப் பைந்தமிழ்ப் பூவையும் காணிக்கை யாக்குகிறேன்.

*மன்னர் நினைவுக்கல்லூரி,*
*சிவகங்கை.*
*7—2—1973*

**கு. செ. இராமசாமி,**

## பதிப்புரை

அரு. கதி. இராமநாதன் செட்டியார்

ஆலயம் தொழுவது சாலவும் நன்று என்று ஔவை மூதாட்டியார் அறிவுறுத்தினர்.

தமிழ்நாட்டில் திருக்கோயில்கள் ஏராளம். கோவில் உள்ள ஊரில்தான் குடியிருக்க வேண்டும் என்னும் கொள்கையைத் தலைமேற்கொண்டவர்கள் தமிழர்கள்.

பாகனேரி பல கோவில்கள் அமைந்த ஊர்; பக்தர்கள் மலிந்த ஊர். ஆண்டுதோறும் விழாவெடுத்து வழிபட்டு மகிழும் ஊர்.

ஸ்ரீ புல்வாநாயகி அம்மன் திருக்கோவில் தொன்மையும் மகிமையும்கொண்டதாகும். இக்கோயிலில் ஆண்டுதோறும் நடைபெறும் திருவிழாவுக்கு வருகைதந்து அம்மனை வழிபட்டுத் திருத்தேரில் அம்மன் உலாவரும் திருக்காட்சியைக் கண்டு களிக்கும் பேறுபெற்றுச் செல்லும் மெய்யன்பர்கள் பல்லாயிரவர் ஆவர்.

ஆண்டுதோறும் திருவிழாவில் திருஉலாவரும் அம்மன் புதிய திருத்தேரில் வரவேண்டும் என்று பாகனேரி நாட்டார், நகரத்தார், மற்றும் சைவப்பெருமக்கள் உள்ளத்தில் பேரெண்ணம் எழுந்தது. எனவே ஒரு திருப்பணிக்குழு நிறுவி, சிவகங்கை மன்னர் திருமிகு கார்த்திகேய வேங்கடாசலபதி ராஜா அவர்களின் இசைவுபெற்று இப்பெரிய திருப்பணி தொடங்கப்பெற்றது.

மனம், மொழி, மெய்யால் அறம் பேணும் பெரியார் திரு அரு. கி. கிருஷ்ணன் செட்டியார் அவர்கள் இத்திருத்தேர்த் திருப்பணிக் குழுவுக்குச் செயலாளர், பொருளாளராகக் கிடைத்தது பாகனேரியின் நற்பேறேயாகும்.

இத்திருத்தேர் இவ்வளவு எடுப்பாகவும்,எழிலாகவும், கம்பீரமாகவும், உறுதியாகவும் அமைந்ததற்குத் திரு. அரு. கி. கிருஷ்ணன் செட்டியார் அவர்களின் மெய்வருத்தம் பாராத இரண்டாண்டுக்கால அருமுயற்சியே காரணம் என்று கூறினல் அது உண்மை; வெறும்புகழ்ச்சியன்று.

இத்திருத்தேர்த் திருப்பணி செவ்வையாக, சிறப்பாக, வெற்றி யாக நிறைவுபெறப் பொற்குவை அளித்தும், நெல், பொரு ளீந்தும், உழைப்பினை நல்கியும், வாய்ச்சொல் அருளியும் உத வினோர் ஏராளம், ஏராளம்.

இவ்வாலயத்தின் தொன்மையும், பெருமையும், புதிய தேரின் அமைப்பும், அதில் இடம்பெற்றுள்ள அற்புதச் சிற்பங்களின் விளக்கமும் அடங்கிய மலர் ஒன்றினை வெளியிட வேண்டுமென் பது அன்பர்கள் பலர் விருப்பம். திருப்பணிக்குழுச் செயலாள ரும் மற்றும் உறுப்பினர்களும் மலர்வெளியிட இசைவுதந்து ஒத்துழைத்ததற்குப் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறேன்.

பதினைந்து நாட்களுக்குள் இரவு பகலாக உழைத்து இம்மலர் இத்துணைச் சிறப்பாகவும், சுவையாகவும், அழகாகவும் எழுத் தோவியங்களைத் தாங்கி வெளிவரக் காரணமான இம்மலர் ஆசிரியர் பேரன்பர் திரு. கு. செ. இராமசாமி எம். ஏ. அவர் களுக்கு என் நன்றி உரித்தாகும்.

அணிந்துரை தந்துதவிய சிவகங்கை மன்னர் திருமிகு து. ச. கார்த்திகேயவேங்கடாசலபதிராஜா அவர்களுக்கும், பாராட் டுரைகள் வழங்கியருளிய தமிழகச் சான்றோர்களுக்கும் என் நன்றி உரியதாகும்.

மலர் சிறப்பாக அமைய ஆலோசனை கூறி ஊக்கமளித்த மலர்க்குழு உறுப்பினர்களான திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தலைவர் பாகனேரி திருவள்ளுவர்நூல்நிலைய ஸ்தாபகர் வித்துவான் வெ. பெரி. பழ. மு. காசிவிஸ்வநாதன் செட்டியார் அவர்களுக்கும், பழம்பெரும் தேசபக்தர் திரு. உடையப்பா அவர்களின் மகன் தேசபக்தர், காளையார்கோவில் ஊராட்சி ஒன்றியப் பெருந்தலைவர் திரு. உ. சுப்பிரமணியன் அவர்களுக்கும், சிவநேசச்செல்வர் திரு. கரு. வே. சுப்பிரமணி யன் செட்டியார் அவர்களுக்கும், பாகனேரி ஊராட்சி மன்றத் தலைவர் அரசியல் பிரமுகர் திரு. மு. காளைலிங்கம் பி. ஏ. (ஆனர்ஸ்) அவர்களுக்கும் என் மனமுவந்த நன்றி உரித்தா கும்.

இம்மலர் சிறப்பாக மலர ஒல்லும் வகையெல்லாம் நல்லுதவி செய்த சிவநேசச் செல்வர் திரு. பழ. முத்துபழநியப்ப செட்டி யார் அவர்களுக்கும், சிவநேசச் செல்வர் திரு. சிவ. கண்ணப்ப செட்டியார் அவர்களுக்கும், அரசியல் பிரமுகர் திரு. பி. திரு

ஞானசம்பந்தன் எம். எல். சி. அவர்களுக்கும், ஒன்றியப்பள்ளி ஆசிரியர் அழ. முத்துராமன் அவர்களுக்கும், திரு. நா. தேனப்ப செட்டியார் அவர்களுக்கும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறேன்.

எட்டாந்தேதியன்று இம்மலர் வெளிவருமோ என்ற சந்தேகம் பலருக்கிருந்தது. ஆனால் இதனை எப்படியாவது எட்டாந்தேதி வெளிவரச் செய்யாமல் உறங்கமாட்டேனென்ற உறுதியுடன் கடைசி ஒரு வாரமாக உறக்கமின்றி உழைத்தவர் இம்மலர் ஆசிரியர் திரு. கு. செ. ராமசாமி எம். ஏ. அவர்கள். அவர்களுக்கு ஸ்ரீ புல்வாநாயகி அம்மனின் பூரண அனுக்கிரகம் கிடைத்தே தீரும்.

இம்மலரை உரிய காலத்தில் சிறந்த முறையில் வெளியிடக் காரணமாகவிருந்து சகல வழிகளிலும் உதவிபுரிந்த சிவகங்கை ஊர்வசி அச்சகத்தார்க்கும், இரவும் பகலும் பணியாற்றிய அச்சகத் தொழிலாளர்களுக்கும் என்மனமுவந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இம்மலரை வெளியிட அன்புடன் இசைந்த பெருமாட்டியார் இராதா தியாகராஜன் அவர்களுக்குப் பெரிதும் கடப்பாடுடையேன்.

நான் திருப்பணிக்குழுவில் உறுப்பினன் அல்லேனாயினும் இந் நற்பணியில் எனக்கு ஈடுபாடும் ஆர்வமும் அதிகம் என்பதற்கு அடையாளமாக, செயலாளரும் குழு உறுப்பினர்களும் இட்ட அன்புக் கட்டளைகளை நிறைவேற்றி வந்திருப்பதோடு இம்மலரை வெளியிடும் பணியில் முழுமையாக ஈடுபட்டு என் சிறுபங்கை ஸ்ரீ புல்வாய்நாயகி அம்மனுக்குக் காணிக்கை ஆக்கியுள்ளேன்.

பாகனேரி, அரு. கதி. இராமநாதன் செட்டியார்.
7-2-1973.

## பொருளடக்கம்



இம்மலர்

8—2—1973

வெள்ளோட்டத் திருநாளன்று

திருமதி கருமுத்து இராதா தியாகராசன் அவர்களால்

வெளியிடப்பெறுகிறது.

அறம் போற்றும் அருளாளர்



சிவகங்கை மன்னர்

மேதகு

## து. ச. கார்த்திகேயவேங்கடாசலபதி ராஜா

அவர்கள்

திருப்பணிக் குழுத் தலைவர்

# திருத்தேர்த் திருப்பணிக்குழு உறுப்பினர்கள்



திரு. பெரி. நடராசத் தேவர், திரு. அ. கண. நாச்சியப்பசெட்டியார், திரு. மு. அழகுபுலி அம்பலம் (கிராம முன்சீப்.) திரு, P. திருஞானசம்பந்தம் M. L. C., திரு. கரு. வே. சுப்பிரமணியஞ் செட்டியார், திரு. உ. சுப்பிரமணியம் (ஒன்றியப் பெருந்தலைவர்), வித்துவான் திரு. மு. காசிவிஸ்வநாதன்செட்டியார், திரு. அரு. கி. கிருஷ்ணன் செட்டியார் (செயலாளர்-பொருளாளர்.) திரு. கா. சுப. சு. கதி. காளையப்பச் செட்டியார், திரு. மு. காளைலிங்கம் B. A. (Hons.,) (ஊராட்சித் தலைவர்) திரு. ரா. வெ. வைரவன், திரு, கா.வெ. கணபதி, திரு. பெரி. அழ. மு. அண்ணாமலைச்செட்டியார், திரு. தே. நா. சொக்கலிங்கம் செட்டியார்.

பக்திநெறிப் பெருமகனார்



பாகனேரி உயர்திரு

அரு. கி. கிருஷ்ணன் செட்டியார் அவர்கள்

திருத்தேர்த் திருப்பணிக்குழுச் செயலாளர் – பொருளாளர்

செயலாளர் - பொருளாளர்

பதிப்பாளர்



திரு. அரு. கதி. இராமநாதன்
செட்டியார்



திரு. கிருஷ்ணன் செட்டியாரும்
அவர்தம் துணைவியார்
திருமதி சிகப்பி ஆச்சியும்

படைப்பாளர்



திரு. கு. செ. இராமசாமி, எம். ஏ.,



திருத்தேரைப் பார்க்க வருகைபுரிந்த செட்டிநாட்டரசர்
டாக்டர் ராஜாசர் முத்தய்யா செட்டியாரவர்களுக்கு
திருப்பணிக்குழுச் செயலர் கிருஷ்ணன் செட்டியார்
மாலை யணிவிக்கிறார்கள்.



மேதகு சிவகங்கை மன்னருக்குத் திருப்பணிக்குழுச் செயலர் மாலையணிவித்தல். அருகில் நிற்பவர் பொறியாளர் திரு. அரு. கி. இராமநாதன், B. Sc.

வெள்ளோட்டம் மலர் வெளியீட்டு விழாவின்போது



திருமதி மங்கயற்கரசி ஆச்சி சுப்பிரமணியன் செட்டியரர்
(S. P. M. Medical Mart)
திருமதி இராதா கருமுத்து தியாகராஜன்,
திரு. ராய. சொ., திருமதி சிகப்பி ஆச்சி,
திரு. கிருஷ்ணன் செட்டியார்

மலர் வெளியிடுபவர்
திருமதி இராதா கருமுத்து தியாகராஜன் அவர்கள்



முதல் மலரை ருபாய் 51/-க்கு பாகனேரி வே. மாணிக்கம் செட்டியார் B. A. அவர்கள் வாங்குகிருர்கள்.
அருகில் இருப்பவர் இம்மலர் பதிப்பாளர்
அரு. கதி, இராமநாதன் செட்டியார்



செட்டிநாட்டரசரும்,
திருத்தேர் திருப்பணிக் குழுவினரும்

## திருத்தேர்த் திருப்பணிக்குழு உறுப்பினர்கள்



திரு. பெரி. நடராசத்தேவர், திரு. அ. கண. நாச்சியப்பசெட்டியார் திரு. மு. அழகுபுலிஅம்பலம் (கிராமமுன்சீப), திரு. P. திருஞானசம்பந்தம் M.L.C திரு. கரு. வே. சுப்பிரமணியஞ் செட்டியார், திரு. உ. சுப்பிரமணியம் (ஒன்றியப் பெருந்தலைவர்), வித்துவான் திரு. மு. காசிவிஸ்வநாதன் செட்டியார், திரு. அரு. கி. கிருஷ்ணன் செட்டியார் (செயலாளர் - பொருளாளர்) திரு. கா. சுப. சு. கதி. காளையப்ப செட்டியார். திரு. மு. காளைலிங்கம் ( B. A., Hons.) (ஊராட்சித் தலைவர்) திரு. ஆர்வி. வயிரவத்தேவர், திரு. கா. வெ. கணபதித் தேவர், திரு. பெரி. அள. மு. மு. அண்ணாமலை செட்டியார், திரு. தெ. நா. சொக்கலிங்கம் செட்டியார்.

உ
ஸ்ரீ புல்வாய் நாயகி அம்மன் துணை

## பாகனேரி
## புல்வாயி நாயகி அம்மன் கோவில்
# திருத்தேர்த் திருப்பணிக் குழு உறுப்பினர்கள்

தலைவர்:
**சிவகங்கை மன்னர்**
## திருமிகு து. ச. கார்த்திகேய வேங்கடாசலபதி ராஜா அவர்கள்
பரம்பரை டிரஸ்டி, சிவகங்கை தேவஸ்தானம்.

உப தலைவர்:
**மேலாளர்**
**சிவகங்கை தேவஸ்தானம்**

செயலாளர் — பொருளாளர்
**பாகனேரி**
## திரு. அரு. கி. கிருஷ்ணன் செட்டியார் அவர்கள்

### குழு உறுப்பினர்கள்

திரு. ஆர். வி. வயிரவத்தேவர் அவர்கள்,
திரு. உ. சுப்பிரமணியன் அவர்கள், காளையார்கோவில் ஊராட்சி ஒன்றியப் பெருந்தலைவர்.
திரு. மு. அழகுபுலி அம்பலம் அவர்கள், பாகனேரி கிராம முன்சிப்.
திரு. பெரி. நடராஜத் தேவர் அவர்கள்.
திரு. கா,வெ. கணபதித் தேவர் அவர்கள்,
திரு. பி. திருஞானசம்பந்தம், M. L. C., அவர்கள்,
திரு. மு. காளலிங்கம்,B. A.,(ஆனர்ஸ்) அவர்கள்,
திரு. தெ, நா. சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள்,
திரு. வெ. பெரி. பழ. மு. காசிவிஸ்வநாதன் செட்டியார் அவர்கள்,
திரு. கரு. வே. சுப்பிரமணியன் செட்டியார் அவர்கள்,
திரு. அ. கண. நாச்சியப்ப செட்டியார் அவர்கள்,
திரு. கா. சுப. சு. கதி. காளையப்ப செட்டியார் அவர்கள்,
திரு. பெரி. அள. மு. மு. அண்ணமலை செட்டியார் அவர்கள்,

**பாகனேரி.**

திருப்பணிக்குழுவும்திருத்தேர்க் கலைஞர்களும்



உட்கார்ந்திருப்பவர்கள்: இடமிருந்து. 1. S. தியாகராஜன் ஆசாரி, 2. அரு. ராமசாமி ஆசாரி, 3. சோம. லெக்ஷ்மண ஸ்தபதி, 4. அரு. கி. செயலாளர், 5. மு. கா. குழுஉறுப்பினர் 6. S. ஏகாம்பர ஆசாரி, 7. சித. நாராயணன் செட்டியார், 8. சொக்கலிங்கம் செட்டியார், குழு உறுப்பினர்,

தரையில் உட்கார்ந்து இருக்கும் பையன்கள்: 1. முனுச்சாமி ஆசாரி மகன் சந்திரன். 2' லெக்ஷ்மண ஸ்தபதி மகன் சோமசுந்தரம்.

இரண்டாது வரிசை; 8. சி. உடையார், 9. சுப்பையா நாயுடு, 11, சு. முத்துக்கருப்ப ஆசாரி. 10. சங்கரன், 12. சோம. வேலாயுதம் ஆசாரி, 13. மு. முனிச்சாமி ஆசாரி, 14. ச, நாகராஜன் ஆசாரி, 15, சுப. ரவி ஆசாரி, 16. பள. அர்ச்சுனன் ஆசாரி, 17. சோம, சின்னத்தம்பி ஆசாரி, 18. சீ. பமவசிவம் ஆசாரி, 19. அ. ராம. கணேசன் ஆசாரி, 20. வீர, ராமசாமி ஆசாரி, 21. ஒ. வாழவந்தான் ஆசாரி, 22. கரு. கண்ணப்பன்,

மூன்ருவது வரிசை; 23. ச. ஞானவேல், 24. கா. கனகசபை ஆசாரி, 25. சு. கணேசன், 26. ஆ.சக்தி 17. ராம. கணேசன் ஆசாரி, 28. மு. சுப்பிரமணிய ஆசாரி, 29. வி. ராதாகிருஷ்ண ஆசாரி.



திருக்கோவிலும் – திருக்குளமும்



பைரவர்



ஐந்து கரத்தனை, யானை முகத்தனை,
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை,
நந்தி மகன்தனை, ஞானக் கொழுந்தினை,
புந்தியில் வைத்தடி போற்றுகின் றேனே.

—திருமூலர்



மனிதரும், தேவரும், மாயா

முனிவரும் வந்துசென்னி

குனிதரும் சேவடிக் கோமள

மே!கொன்றை வார்சடைமேல்

பனிதரும் திங்களும், பாம்பும்,

பகீரதி யும்படைத்த

புனிதரும், நீயும்என் புந்திஎந்

நாளும் பொருந்துகவே!

—அபிராமிபட்டர்



# பக்திப்பயிர் வளர்க்கும்

# பைந்தமிழ்ச் சீமை

உலகில் ஒவ்வொரு நாட்டைச் சேர்ந்தவர்களும் ஒவ்வொரு சிறப்பியல்புடையவர்களாகக் காணப்படுகிருர்கள் உதாராணமாக, சப்பானியர்கள் சுறுசுறுப்பானவர்கள்; ஓயாமல் உழைப்பவர்கள். செருமானியர்கள் ஆழமானவர்கள்; ஆராய்ச்சி மனப்பான்மை உடையவர்கள். பிரெஞ்சுக்காரர்கள் உல்லாசிகள். உணர்ச்சிமயமானவர்கள். அமெரிக்கர்களோ சன நாயகப் பண்பு மிகுந்தவர்கள்; எதற்கும் இடங் கொடுக்கக் கூடியவர்கள். நம்மைப் பல்லாண்டுக் காலம் அடக்கி ஆண்ட பிரிட்டிஷ்கரார்கள் ஆட்சித் திறமையும், தந்திர வித்தையும் கைவந்தவர்கள். ரஷ்யர்கள் கடின உழைப்பாளிகள்; கட்டுப் பாட்டுணர்ச்சி நிறைந்தவர்கள்.

நாம் எப்படி? இந்தியர்களாகிய நமது மனப்பான்மை என்ன?

நாம் இயல்பாகவே பக்தியுணர்ச்சி மிகுந்தவர்கள். தெய்வத்தின் மீது பக்தி செலுத்துவோம்; தெய்வபக்தி இல்லா விட்டால் தெய்வத்தின் இடத்தில் வேறு ஏதாவது ஒன்றை வைத்து அதன் மீது பக்திசெலுத்துவோம். அதன் புகழையே எப்போதும் பேசுவோம்! இது நம்மிடம் காணப்படும் சிறப்பி பியல்பு.

இமயம் முதல் குமரி வரையில் இந்த நாடெங்கும் எண்ணற்ற கோயில்களை நம் முன்னோர்கள் எழுப்பி வைத்திருக்கிருர்கள். இந்தக் கோயில்கள் நமது பக்தி உள்ளத்திற்குச் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குவதோடு, பக்தி மனப்

பான்மை பாழ்பட்டுவிடாமல் காக்கும் பராமரிப்பு நிலையங்களாகவும் விளங்குகின்றன. இத்தகைய பராமரிப்பு நிலையங்களுள் ஒன்ருகத் திகழ்வது பாகனேரி ஸ்ரீ புல்வாய்நாயகி அம்மன் கோவில்.

*'பெய்ந்து விளைகிறது மலையாளச் சீமை*
*பாய்ந்து விளைகிறது தஞ்சாவூர்ச் சீமை*
*காய்ந்து விளைகிறது இராமநாதபுரச் சீமை'*

என்று வேடிக்கையாகக் கூறுவார்கள்.

இராமநாதபுரச் சீமை வயல் வளத்தில் குறைந்ததாக இருக்கலாம்; ஆனல் செயல் வளத்தில் இது மற்ற சீமைகளையும் மிஞ்சக்கூடியது! பொருட் செல்வத்தில் சற்றே பின் தங்கலாம்; ஆனல் அருட்செல்வத்தில் தமிழகத்தின் பிற பகுதிகளுக்கு நிகராக, என் ஒரு படி மேலானதாகவே இது விளங்கி வருகின்றது! விசிட்டாத்துவைத வைணவ சமய ஆசாரியரான ஸ்ரீ இராமானுசர் பிறந்து வாழ்ந்த நாடு பாண்டிவளநாடே என்பதையும், பரசமய கோளரியான சம்பந்தப் பெருமான் சமணர்களை வாதில் வென்று 'சைவ சமயமே சமயம்' என்று நிலைநாட்டிய இடம் மதுரையம்பதியே என்பதையும் நாம் இங்கு நினைவிற்கொள்ள வேண்டும்.

சங்ககாலப் பாண்டியர்களிலிருந்து பிற்கால இராமநாதபுர சேதுபதிகள் — சிவகங்கை கெளரி வல்லபர்கள் வரையில் பாண்டிநாட்டு மன்னர்கள் யாவரும் அருள்நெறிக் காவலர்களாகவே ஆட்சி செய்திருக்கிருர்கள். மணிவாசகப் பெருந்தகையாரால் சிவலோகமாகக் கொண்டாடப்பெற்ற பாண்டிய நாட்டை வலிந்து கைப்பற்றிய நாயக்க மன்னர்களும் பிறரும் கூட நமது மக்களின் பக்தி மனப்மனப்பான்மைக்கு ஊறு விளைவிக்கவில்லை! மாருக, உதவியே புரிந்திருக்கிருர்கள்; ஒப்பற்றதிருப்பணியாளர்களாகவேஅவர்கள்வாழ்ந்திருக்கிருர்கள்!

*'மூவேந்த ரோடு*
*முதியதமிழ் நாடாண்ட*
*கோவேந்தர் எல்லாம்*
*குறைவின்றி அந்நாளில்*

நல்லறத்தைக் காத்து
நலிவகற்றி இந்நாட்டின்
இல்லங்கள் தோறும்நல்
இன்பப் பயிர்வளர்த்தார்!
படிப்படியாய் அன்னூர்
பலங்குறைந்த நாள்தொடங்கி
அடிப்படையாய் நிற்கும்
அறவுணர்வு மாருமல்
தருமநெறி காத்துவரும்
தனவணிகர் பரம்பரையும்
கருணைமிக்க நாட்டாரின்
கணக்கற்ற தலைமுறையும்'

ஆலயங்களையும் அறநிறுவனங்களையும்ஆர்வமுடன் நிர்வகித்து வருகின்றன.

ஆழ்வார்களும், நாயான்மார்களும், பிற்கால அருட் கவிகளான அருணகிரிநாதர், குமரகுருபர அடிகள் போன்றவர்களும் நமது பகுதி ஆலயங்களைச் சிறப்பித்துப் பாடியிருக்கிருர்கள்.

ஆன்மீகத்தில் மட்டுமல்லாது அரசியலிலும் நமது பகுதி மக்கள் விழிப்புணர்ச்சி மிகுந்தவர்கள். இந்திய விடுதலைக் காவியத்தின் ஆரம்பப் படலங்களை நமது வீரர்களே அலங் கரிக்கிருர்கள்!

பக்தியுணர்ச்சியும், வீர உணர்ச்சியும் நமது மக்களின் இரத் தத்தோடு இரண்டறக் கலந்தவை. வீரர்களின் தெய்வம் கொற்றவை—காளா. வீர உணர்ச்சி நிரம்பிய நம்மவர்கள் கொற்றவை வழிபாடு செய்துவருவதில் ஆச்சரியம் ஒன்றும் இல்லை. தமிழகத்தின் பிறபகுதிகளில் வெறும் பக்தியாக மட்டுமே காணப்படும் உணர்ச்சி இங்கே வீர பக்தியாக வடிவம் பெறுகின்றது.

தங்கள் வாழ்க்கையை மேலும் வெற்றிகரமானதாக ஆக்கிக் கொள்ள, நமது நாட்டாரும், நகரத்தாரும் பெண் தெய்வங் களையே பெரிதும் வழிபட்டு வருகிருர்கள். இந்தச் சீமையில்

அமைந்துள்ள நூற்றுக்கணக்கான அம்மன் கோயில்களுள் திருவெற்றியூர் பாகம்பிரியாள் கோயிலும், கொல்லங்குடி பத்ரகாளி அம்மன் கோயிலும், நாட்டரசன்கோட்டை கண்ணுத்தாள் கோயிலும் ஆயிரக்கணக்கான பக்தர்களை அன்ருடம் ஈர்த்து வருகின்றன. பாகனேரியில் திருக்கோயில் கொண்டு விளங்கும் அன்னை புல்வாய் நாயகியும் அன்பர் துயர் துடைக்கும் அபய வரதையாகவே திகழுகின்ருள்.

தெய்வம் எங்கும் பரவியிருப்பது. ஆனல் அதன் அருள் சில இடங்களில் மட்டுமே சாந்நித்தியம் கொள்ளுகின்றது. சாந்நித்தியம் மிக்க தாயாக ஸ்ரீ புல்வாய் நாயகி கோயில் கொண்டிருக்கும் ஊர் பாகனேரி.

●



# பாடல் பெற்ற

# பாகனேரி

ஏரி என்னும் ஈற்றுச் சொல்லுடைய ஊர்கள் தமிழ் நாட்டின் வடபகுதியில் மிகுதி. அருமையாக இம்மா வட்டத்தில் இவ்வூர்ப் பெயரில் அச்சொல்லைக் காணுகின்றோம்'' என்று பாகனேரி பெயர்க்காரணத்தை அறிஞர் 'சோமலெ' ஆராய்கிறார். உலகம் சுற்றிய தமிழரான 'சோமலெ' இராமநாதபுர மாவட்டத்தையும் நன்கு சுற்றிப் பார்த்து, 'ஊரணி, கண்மாய் என்ற ஈற்றுச்சொற்களே இம் மாவட்டத்தில் வழக்கு' என அறிவிக்கின்றார்.

'மங்கை பாகன்' என்ற சொல் உமாமகேச்வரரான சிவபெருமானைக் குறிப்பது. இச்சொல்லில் 'மங்கை' என்ற முதற்பகுதி குறைந்து 'பாகன்' என்ற எஞ்சியபகுதி மட்டும் நின்றாலும்கூட அது சிவபெருமானையே குறிக்கும். இங்கு 'பாகன்' என்ற சொல்லும் 'ஏரி' என்ற சொல்லும் சேருவதால் உருவாகும் 'பாகனேரி' என்ற சொல்லிற்கு, 'உமையொரு பாகனாகிய சிவ பெருமான் விரும்பிய உறையும் நீர் வளமிக்க ஊர்' என்று விளக்கம் கொண்டால் அது தவறாகாது. 'ஏரியைப் போன்று விரிந்து பரந்த உள்ளமுடையவர்கள் வாழும் ஊர்' என்று பொருள் கொள்ளவும் இச்சொல் இடங்கொடுக்கும்.

மிதிலைப்பட்டிக்குழந்தைக் கவிராயர், பாடுவார் முத்தப்பசெட்டியார் போன்ற வரகவிகளின் பாடல்களில் பாகை, தென்பாகை தென்பாகை நாடு, பாகை நகர், பாகைநகரம் என்றெல்லாம் இவ்வூர் இடம் பெற்றுள்ளது.

*மிதிலைப்பட்டிக்குழந்தைக் கவிராயர்:* இவர் மிதிலைப்பட்டிக் கவிராயர் திருமரபில் பிறந்தவர். 18-ஆம் நூற்ருண்டின் பிற்பகுதியிலும் 19-ஆம் நூற்ருண்டின் முற்பகுதி - இடைப்பகுதிகளிலும் வாழ்ந்தவராகக் கருதப்படும் இக்கவிராயர் *மான்விடு தூது* என்ற சிற்றிலக்கியத்தையும் பல தனிப்பாடல்களையும் பாடியிருக்கிருர். சிவகங்கை அரசரிடம் அமைச்சுப்பணி புரிந்த தாண்டவராயபிள்ளை என்ற பெருமகனுர் இவருக்குப் பேராதரவு கொடுத்திருக்கிருர். இவர் பாடல்களைக் கேட்டு மகிழ்ந்த பிள்ளை இவருக்கு ஓராயிரம் கலம் நெல்லை அன்பளிப்பாக வழங்கிஞராம். தம்மை ஆதரித்த தாண்டவராய பிள்ளையையே பாட்டுடைத் தலைவராகக் கொண்டு கவிராயர் பாடிய 'மான் விடுதூது' டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் அவர்களால் மதிப்பிக்கப்பட்டுள்ளது. இந்த நூல் பல வரலாற்றுக் குறிப்புகளை உடையது. சிவகங்கை முத்துவடுகநாத மன்னர் கோட்டியூர்ச் சௌமிய நாராயணர் கோயிலுக்குச் செய்த திருப்பணி விவரங்களை இந்த நூல் வாயிலாகத்தான் அறிகின்ருேம். பாகனேரி புல்வாய்நாயகியையும் இவர் துதித்துப் போற்றுகின்ருர்:

*"....,.. நண்பாகத்*
*தீராத வல்வழக்குத்*
*தேருக் களவுகன்னம்*
*பேரான எல்லைப்*
*பிசகுமுதல் – ஆராய்ந்து*
*சுத்தன் அசுத்தன் என்று*
*சோதனையாய் நாக்குமழு*
*வைத்தோதக் கற்பித்த*
*வல்லமைகள் – அத்தனையும்*
*தென்பாகை நாட்டில்*
*சிறந்தபுல்வாய் மாதென்றே*
*அன்பாகச் சொல்ல*
*அவதரித்தாய்! –"*

புல்வாய் நாயகிக்கு மழுவேந்தி என்ற சிறப்புப்பெயர் உண்டு. மழுவேந்தி என்ற அச்சிறப்புப் பெயர் தோன்றக் கவிராயர் பாடியிருக்கும் நயம் அறிந்து இன்புறத்தக்கது.

'நாவலர் தாரு' 'வானார்புரவலன்' என்ருு பலவாருகத் தம்மால் பாராட்டப்பெற்ற தாண்டவராயபிள்ளையைமுன்னிலைப்படுத்தி,

செஞ்சிதஞ்சை மதுரைமைசூர் மாறு பாஷை
செந்தமிழின் கனமறிந்து செய்ய மாட்டார்;
மஞ்சுறிகர் கப்பளத்தார் கொடுத்தி ஊத்தார்;
வளர்பாக னேரிக்கு வடபால் எல்லாம்
பஞ்சஇலக் கணப்அறிந்தார் மெத்த உண்டு;
பாவாணர் கவிதைஅவர் பால்செல் லாது!
தஞ்சம் இனி வேறும்உண்டோ முல்லை வேந்தே!
தாண்டவரா யா!குவளைத் தாரி ஞனே!

என்று நகைச்சுவையும் அவலச்சுவையும் தோன்றப்பாடும் வேளையில் கவிராயர் பாகனேரியைத்தான் எல்லைக் கோடாக வகுத்துக் கொள்கிறார்!

பாடுவார் முத்துப்ப செட்டியார்:

''காடுவெட்டிப் போட்டுக் கடிய நிலம்திருத்தி
வீடுகட்டிக் கொண்டிருக்கும் வேள்வணிகர்-வீடுகட்கு
அன்றைக்கு வந்தாளங்கள் அம்மா! இலக்குமி நீ
என்றைக்கும் நீங்கா திரு'' — என்ற புகழ் பெற்ற பாடலின் ஆசிரியரான முத்தப்ப செட்டியார் 19ஆம் நூற்றுண்டில் வாழ்ந்தவர் (காலம் கி. பி. 1810 - 1883). இவர் வாக்கில் இடம் பெருத செட்டி நாட்டுக் கோயில்களோ ஊர்களோ இல்லை என்று துணிந்து கூறலாம். 'திருமுக விலாசம்' முதலாகப் பல்வேறு சதகங்கள் ஈருக எண்ணற்ற பாடல்களை எழுதிக் குவித்தவர். வாக்குப் பவிதம் உடையவர். காளமேகத்திற்கு நிகரானவர். அம்பிகையின் புகழையும் அவள் கோயில் கொண்டிருக்கும் நாட்டையும் பக்திச்சுவை நனிசொட்டச் சொட்ட இவர் பாடுகிறார் :

தென்பாகை நாட்டினிற் செயபேரி முழங்கவே
சிறப்புடன் வாழு கின்ருய்!
தேவிஅம் பிகையான திரிசூலி என்றுநீ
தெரியாத பேர்க ளுக்குச்

சிங்கார மாகவே உன்பேர் விளங்கவே
தெரிசிக்க வேண்டு மம்மா!
சிவகங்கை நாச்சியார் என்னுடைய நாடென்று
தெரியாமல் வழக்கா டுளுர்!
உன்பாத மேதுணை துணையென்று நாங்களிவ்
ஊரார் அனைவோர்களும்
உன்னுடைய உத்தரவு உறுதியாய்க்
[கேட்டுக்கொண்(டு)

ஓங்கார மாய்எ மும்பி
ஒருவருட காலமாய் வழக்காடி ருபாய்ஒன்
பதினாயிரம் செலவழித் தோம்!
ஒன்றுமறி யாதவள் போல்நீ இருப்பது
உலகத்துக் கேலி யலவோ?
அன்பாக உத்தரவு தந்தநீ இப்போது
அசதியாய் இருப்பதென்ன?
ஆறாரு நாட்டையும் அருமையாய் வளர்க்கின்ற
ஆத்தாளும் நீயல்லவோ?
ஆகையா லேஇந்த வழக்குக்கு எதிராக
ஆராரு வந்த போதும்
அவரவர்கள் நெஞ்சினில் அனுவாக வேநின்று
அப்புறம் விலக்கி வைத்தும்
மன்பாகைச்சிமையை மனுநீதி நடத்திடும்
மகராணி அவர்க ளுக்கும்
மதராசு மதுரையில் உத்தியோ கம்செய்யும்
மகாகன வான்க ளுக்கும்

மாயைபோல் கனவினில் மந்திரம் சொல்லியே
வரிசையை வாங்கி வருவாய்!
மாயனுடைத் தங்கையே! பாகைநகர்
[மங்கையே!
மாதுபுல் வாய்அம் மையே!

பாகனேரியில் சாமு ஐயர் என்னும் புலவர் பள்ளி ஆசிரியராகப் பணியாற்றியவர். இவரும் புல்வாய் நாயகியின் மீது 'காதலாகிக்கசிந்து கண்ணீர் மல்கி'யவர். புல்வாய்நாயகியைத் தோத்திரம் செய்து பாடும் போது பாகனேரியில் உறையும் எல்லாத் தெய்வங்களையும் ஒரு சேர நினைத்துப் பாராட்டுகிருர். இவர் பாடிய இந்தப் பாடலும் பாகனேரி மக்களிடையே பரவலான செல்வாக்குப் பெற்றிருக்கிறது; அம்பிகையின் சந்நிதியில் அன்ருடம் பாடப்படுகிறது. பாகனேரித் தலத்தையே ஒரு பறவைக் கண்ணுேட்டமாகப் பார்த்துப் பாடப்பெற்ற சாமு ஐயர் பாடலைப் படிப்போம்; பக்திச் சுவையில் திளைப்போம்:

திருமாது இளையவள் அனுதினமும் வளர்கின்ற
செல்வமிகு பாகனேரித்
திருநகர மிதினில் அரசுபுரி கணபதி
சேந்தூர ணிக்கரையினில்
செல்வம் பொருந்திஐங் கரமுடைய அப்பனைச்
சேவித்து அடிபணிந்து
திருநீல கண்டனுமை கருணைக டாக்ஷியைச்
சிந்தைதனி லேநிறுத்தி
முருகவேள் கந்தய்யன் குமரகுரு அறுமுகன்
முத்தய்யன் சக்தி வேலன்
மூஷிகற் கிளையவன் வள்ளிகுஞ் சரிநேய

---

இந்தப்பாடலில் குறிப்பிடப்படும் வழக்கில் ஸ்ரீ புல்வாய் நாயகி வெற்றி பெற்றதாகவும், இந்த வெற்றிக்காகப் பாடுவார் முத்தப்ப செட்டியாருக்கு அவர் ஆயுள் உள்ளவரையில அம்பாள் கோவிலிலிருந்து ஆண்டுதோறும் பொங்கல்சீர் அனுப்பப்பட்டதாகவும் கூறுவர்.

மூர்த்திபண் டிதனை வாழ்த்தி
முராரிதிரு மாலான முகுந்தன்அச் சுதனென்னும்
முளரிப் பதத்தை உடைய
மோதுவா ரிதியிலே சயனித்த பிரபுவாம்
முல்லைமலர் ஆரமணியும்
கருணாக ரக்கடவுள் விண்ணவண்
[ணத்துடைய
காந்தியாம் விஷ்ணு மூர்த்தி
கண்ணனைக் கோவிந்த மன்னனைத் திருமேவு
காதலன் பாத மதுவே
கருதியே போற்றினேன் சென்மவினை
[போக்கியே
கூசடற வேவாழ்த்தினேன்!
காமனைப் பெற்றதுரை ராசனைப்போசனைக்
கண்டிடவும் ஆசை யுற்றேன்!
பெருமையுயர் அரிகர புத்திரன் பாலசாத்
தய்யனையும் அம்மை இருவர்
புகழ்பெருகு தேரடிக் கருப்பய்யா தன்னையும்
போற்றியே தெண்ட னிட்டேன்
புலவர்களை ரட்சிக்கும் அம்மணி கல்யாணி
பூரணி கடாக்ஷி யான
புல்வாய்நா யகியம்மன் பொன்னடியை
[வாழ்த்தினேன்
புகழ்பெருக அருளு வாயே!

புலவர்கள் போற்றிப் புகழ்ந்து பாடும் ஊரான பாகனேரி இராமநாதபுர மாவட்டம், சிவகங்கை வட்டத்தில் குறிப்பிட்டுச் சொல்லத்தக்க பெரிய ஊராக விளங்குகிறது. ஐயாயிரத்துக்கும் மேற்பட்ட மக்கள் தொகையுடைய இவ்வூர் காளையார்கோவில் ஊராட்சிஒன்றியத்தில் அங்கம் வகிக்கிறது. பாகனேரி சிவகங்கையிலிருந்து வடகிழக்காகப் பதினைந்து கல் தொலைவிலும்,திருப்புத்தூரிலிருந்து தென்கிழக்காகப்பதினைந்து கல் தொலைவிலும் அமைந்துள்ளது.

இந்த ஊர்களிலிருந்து பஸ் மூலமாகப் பாகனேரியை அடையலாம். நேரடியான புகைவண்டித் தொடர்பு இல்லாவிட்டாலும் பாகனேரியிலிருந்து மூன்று கல் தொலைவில் பனங்குடி - புகைவண்டி நிலையம்அமைந்துள்ளது ஓரளவு உதவியாகஇருக்கிறது.

வாழ்கோட்டை நாட்டார்களும், நாட்டுக்கோட்டை செட்டியார்களும், பிற இனத்தவர்களும் ஒற்றுமையாக வாழும் ஊர் பாகனேரி.

பாகனேரி மக்கள் சமய உணர்ச்சி நிறைந்தவர்கள். இவர்கள் சமய உணர்ச்சிக்கு எடுத்துக்காட்டாகச் சிவன் கோவில், பெருமாள் கோவில், நயினர் கோவில் முதலான பல கோயில்களை நாம் இங்கே காணலாம். இந்த ஆலயங்களுக்கு நடுநாயகமாக விளங்குவது புல்வாய் நாயகி அம்மன் கோவில். அருட்பெருஞ்சோதியாக — தனிப்பெருங்கருணையாக இங்கே வீற்றிருந்து அண்ட கோடிகளை அன்னை புல்வாய் நாயகி ஆட்சி செய்து வருகிருள்.





# அருள் ஒளி பரப்பும் ஆலயம்

முன்னும் பின்னும் பசுமையான விளைநிலங்கள் அமைந்த அழகான சூழ்நிலையில் ஊருக்குக் கீழ்ப்புறமாக, சிவன் கோவிலுக்கு இடப்பக்கத்தில் புல்வாய் நாயகிஅம்மன் கோவில் அமைந்துள்ளது.

கோவிலுக்கு முன்புறத்தில் தென்னை, வேம்பு, அரசு, ஆல், புளி, வில்வம் முதலிய மரங்களால் சூழப்பெற்ற தெப்பக்குளம் ஒன்றும் இருக்கிறது.

கண்டனூர் வெள்ளையன் செட்டியார் குடும்பத்தாரால் சிறு கோவிலாகக் கட்டப்பட்ட இது காலப் போக்கில் படிப்படியாக வளர்ந்து கருப்பகிருகம், அர்த்தமண்டபம், கீழ்ச்சுரங்கத்தில் கற்கால் மண்டபம், முன்மண்டபம், திருச்சுற்று மதில், அலங் கார மண்டபம் என்பவைகளோடு இன்று காட்சியளிக்கிறது. கோவிலுக்கு வெளியே வலப்புறத்தில் ஸ்ரீ காய்ந்தவகால கணபதி வீற்றிருக்கிறார். மழை பெய்யாவிட்டால் இந்த விநாயகரின் மூக்கு வரையில் தண்ணீர் கட்டப்படுமாம். மழை பெய்தபிறகு தண்ணீர் திறந்து விடப்படுமாம். இந்த விநாய கரை நீரில் முழுக்காட்டும் பொழுது நிலம் மழையால் முழுக்காட்டப்படுவது நிச்சயம் என அறிகிறோம்.

இந்த விநாயகருக்கு மறுபக்கத்தில் ஒரு மண்டபம் அமைந் துள்ளது. தை மாதத்தில் தைலக்காப்பு உற்சவம் நடத்து வதற்காக இது நா. நா. நாச்சியப்ப செட்டியார் குடும்பத் தாரால் கட்டப்பட்டது.

ஆலய முன் மண்டபத்தில் கொடிமரம், பலிபீடம், வேதாள வாகனம் என்ற மூன்றும் அமைதுள்ளன. வேதாளத்திற்கு மேலே உள்ள மேற்கூரைப்பாவுகல்லில் ஒரு துளை காணப்படு கிறது. கடிகாரம் இல்லாத காலத்தில் காலக்கணிப்புக்காக இந்தத்துளை போடப்பட்டதாகப் புல்வாய் நாயகி கோவில் பூசாரிகள் தெரிவிக்கிருர்கள். சூ ரிய ன் உச்சிக்கு வந்து பலி பீடத்தில் நிழல் விழுந்தால் பகல் ம ணி சரியாக ஒ ன் று!

பிராகாரத்தில் வலம் வரும் பொழுது கிழக்கு நோக்கி அமைந்த முத்து விநாயகரைத் தெரிசிக்கலாம். அடுத்து நெய்க்கொட்டை மரமும், குங்குமக் காப்போடு கூடிய பீடமும் காட்சி அளிக்கின் றன. கண்டனூர், ஆத்தங்குடி, முத்துப்பட்டினம், காரைக்குடி நகரத்தார்கள் இந்தப் பீடத்தை அக்கினி நாச்சியார் என்றும் பாகனேரி மக்கள் நாச்சியாத்தாள் என்றும் அழைக்கின்றனர். அக்கினி ஆத்தாளுக்கு அக்கினிச்சட்டிப் பிரார்த்தனை வழி பாடுக ளைக் கண்டனூர்க்காரர்கள் ஆண்டு தோறும் நடத்தி வரு கிருர்கள். வடக்குப்பிராகாரத்தில் முனீஸ்வரர்சந்நிதி அமைந் திருக்கிறது.

பலி பீடத்திற்கு வலப்பக்கம் மூன்று கருவறைகள் உள்ளன. புல்வாய் நாயகியின் நான்கு கைகளோடு கூடிய ஐம்பொன் ஞலான உற்சவ விக்கிரகமும், பிள்ளையார், அஸ்த்திர தேவர், சீவிலி அம்மன் மு த லி ய தெய்வங்களும் மு த ல் கருவறையில் இருக்கின்றன. இரண்டாவது அறையில் எட்டாந் திருவிழாவில் உலா வரும் சாமுண்டேஸ்வரி கு டிகொண்டிருக் கிருள். மூன்ருவது கருவறையினுள் பைரவரும் அறைக்கு வெளியே அகஸ்த்தியர் புலஸ்த்தியர் விநாயகரும் விளங்கித் தோன்றுகின்றனர். அருகிலுள்ள ஒ ரு தூணில் ஆஞ்சநே யரையும் காணலாம்.

கர்ப்பக்கிருகத்தில் எட்டுக் கைகளோடு ஸ்ரீ புல்வாய் நாயகி காட்சி அளிக்கிருள். இந்த நாயகியைப் பாடுவார் முத்தப்ப செட்டியார், மிதிலைப் பட்டிக்குழந்தைக்கவிராயர், சாமு ஐயர், முதலிய பாவலர்கள் பாடியிருக்கிருர்கள்; பாடிப் பயன் பெற்றி ருக்கிருர்கள்.

பாகனேரி நாட்டாருக்கும் நகரத்தாருக்கும். கண்கண்ட தெய்வமாக அருள்பாலித்துவரும் இந்த அன்னையைத்தேடி ஆயிரக்கணக்கான பக்தர்கள் வருகிறார்கள். அவள் அருள் பெற்றுத் திரும்புகிறார்கள்.

புல்வாய் நாயகி என்ற பெயரே கவிதைச் சுவை உடையது. புல்வாய் என்ற தமிழ்ச்சொல்லுக்கு மான் என்பது பொருள். மகிஷாசுரன் தன் மாயையால் வெவ்வேறு வகையான வடிவங்களைத் தாங்கி அன்னை பராசக்தியோடு போர் புரிந்தான். போர் உக்கிரமாக நடந்தது. அவன்கொண்ட ஒவ்வொரு கோலத்தையும் அன்னை இனம் புரிந்து கொண்டு அந்தந்தஇடத்திலேயே அவனை அழித்து வந்தாள், மகிஷாசுரன் புல்லாக மாறிப் படர்ந்து கிடந்தான். தேவி மானாக வடிவம் தாங்கி அவனை மேய்ந்து முடித்தாள். தேவி புல்வாயாக உருவம் எடுத்து மகிஷனை வதைத்து உலகைக் காத்த இந்த அற்புத நிகழ்ச்சி இப்பொழுது கோவிலுக்குப் பின்புறமாக அமைந்துள்ள 'புல்லைவனம்' என்ற பகுதியில் நிகழ்ந்ததாகத் தெரிகிறது. மகிட வதைக்குப் பின் புல்வாய் நாயகி என்ற பெயரோடு அம்பிகை இங்குக் கோயில் 'கொண்டதாக அறிகிறோம்.

புல்வாய் நாயகிக்கு 'மழுவேந்தி' என்ற சிறப்புப் பெயரும் உண்டு. பழுக்கக் காச்சிய கொழுமுனையை நாவால் தடவி நீதி நிலை நாட்டப்பட்ட ஒரு பழைய நிகழ்ச்சியை இந்தச் சொல் குறிக்கிறது. ஒரு முறை இராமநாதபுர மன்னரின் பதக்கம் திருடு போய்விட்டதாம். இங்கு அம்பிகையின் சந்நிதானத்தில் வைராவிகள்நாவில் மழுவேந்திஉண்மையைக் கண்டுபிடித்தார்களாம். இராமநாதபுர மன்னரின் கனவிலும் அம்பிகை உதயமாகித் திருடிய ஆளையும், திருடப்பட்ட பொருள் இருந்த இடத்தையும் கூறினளாம். அவள் கூற்றின் படிப் பதக்கம் கிடைக்கப் பெற்ற முகவை மன்னர் அம்பிகையின் அருளை வியந்து பதக்கத்தை அவளுக்கே காணிக்கையாகத் தந்துவிட்டாராம். இந்தப் பதக்கம் இன்றளவும், அம்பிகையின் அலங்காரத்திற்குப் பயன்படுத்தப்பட்டு வருவதாகவும் பூசாரிகள் சொல்கிறார்கள். கோயில் மணியம் முதலானவர்கள் மூலமாக மேலும் ஒரு சுவையான நிகழ்ச்சியை அறிகிறோம்:

நாவால் மழுவைத் தீண்டிச் சரியான குற்றவாளியைக் கண்டு பிடித்த வைராவிகள் தவருன செய்தியை மன்னருக்கு அனுப்பி ஒரு நிரபராதியைத் தண்டனைக்கு ஆளாக்க முற்பட்டனர். இந்த விவரம் வெளியானவுடன் மிகவும் மனம் வருந்திய பாகனேரி நாட்டார், நகரத்தார்கள் ஒன்று கூடி விசாரணை நடத்தி முகவை மன்னருக்குப் பிழையான செய்தியைஅனுப்பிய அந்தக்குற்றவாளிகளுக்குக் கொலைத்தண்டனை விதித்தார்களாம். இவர்களை வைத்த இடத்தில் நான்கு கற்கள் நடப்பட்டன. கோவிலுக்கு வெளியே உள்ள அரச மரத்துக்குப் பக்கத்தில் அந்தக் கற்கள் இன்றளவும் காட்சிப் பொருளாக நின்று கொண்டிருக்கின்றன. பொய்யர்களுக்கும், பிறர் கேடு நினைப்பவர்களுக்கும் எச்சரிக்கை விடுக்கும் கற்களாக, அம்பிகையின் நீதி பரிபாலனத்தை நிலைநாட்டும் கற்களாக இவைகள் விளங்குகின்றன.

கோவில் முழுவதும் பழுது பார்க்கப்பட்டுப் பாகனேரி நாட்டார் நகரத்தார்களால் 1944 ஆம் ஆண்டு கும்பாபிஷேகம் செய்யப்பட்டது.

அரு. கரு. வே. வேலாயுதம் செட்டியார் அவர்களால் முன் மண்டபத்தில் தளவரிசை போடப்பட்டது.

இரு. மு. முத்தையா தேவர் அவர்களும், து. அள. அழகர் சாமி நாயக்கர் அவர்களும் ராஜகோபுரத்தைச் செப்பனிட்டார்கள்.

சுற்றுப் பிராகாரமும் தெற்கு நோக்கிய குடவரை வாசலும், சுற்றுப் பிராகாரத்தில் உள்ள தளவரிசையும் நாட்டார் நகரத்தார்களால் செய்யப் பெற்றவை.

திருவாச்சி அலங்கார மின் தொடர் விளக்குகள் காசு. பழ. தே. சீதை ஆச்சியாலும், கோவில் முழுவதுக்குமான மின் இணைப்பு நா. கண. கண்ணம்மை ஆச்சியாலும் காசு. பழ. தே. சீதை ஆச்சியாலும் செய்து தரப்பெற்றுள்ளன.

கர்ப்பக்கிருகத்துக்குள்ளே காணப்படும் நட்சத்திர விளக்கு அரு.கரு.வே. தெய்வானைஆச்சிஅவர்களால் ஏற்றப்பெற்றது.

ராஜகோபுரத்தில்உள்ள'மெற்குரி'விளக்கு இரு. மு. ராமநாதன் அவர்களால் போட்டுக்கொடுக்கப்பெற்றது.

ஆண்டு தோறும் ஆனித் திங்கள் மகநட்சத்திரத்தில் வேதாளக் கொடி எற்றிக் காப்புக் கட்டி ஸ்ரீபுல்வாய்நாயகிக்குக்கேட்டை நட்சத்திரத்தில்பத்துநாள்திருவிழா மிகச்சிறப்பாகநடைபெற்று வருகிறது. இந்தப்பத்துநாள்விழாவில் தேரோட்டமே தலையாய விழா. முன்னூறு ஆண்டுகளுக்கு முன்பு செய்த ஒரு திருத்தேர் இதுகாறும் பயன்படுத்தப்பெற்று வந்தது. அது பழுதான நிலையில்உள்ளதால் தொடர்ந்து பயன்படுத்துவது ஆபத்தாக முடியலாம் என்று பாகனேரி மக்கள் கருதினுர்கள். திருத்தேர்த் திருப்பணிக்குழு அமைக்கப்பெற்றுச் சாதாரணஆண்டு ஆவணித் திங்கள் பத்தொன்பதாம் நாள் (4-9-1970) மேதகு *சிவகங்கை மன்னர் கார்த்திகேய வேங்கடாசலபதி ராஜா* அவர்களின் திருக்கரத்தால் தச்சுச்செய்து திருத்தேர்த் திருப்பணி தொடங்கப்பெற்றது. வரதையான அம்பிகையின் அருளாலும், மேதகு மன்னர் அவர்களின் கைராசியாலும் மற்றும் திருப்பணிக் குழுவினர், கலைஞர்கள், தொழிலாளர்கள் பொதுமக்கள் ஒத்துழைப்பாலும், திரு. அரு. கி. கிருஷ்ணன் செட்டியார் அவர்களின் அரும்பெரும் முயற்சியாலும் திருப்பணி இனிது நிறைவேறிப் பரிதாபி ஆண்டு தைத் திங்கள் 26ஆம் நாள் (8-2-1973) புதிய தேர் வெள்ளோட்டம் காணப் பெறுகிறது.

பாகனேரியில் அமைந்திருக்கும் எல்லாக் கோவில்களும் சிவகங்கைசமஸ்தானதேவஸ்தான ஆளுகைக்கு உட்பட்டவை. மேதகு மன்னர் அவர்களின் மனப்பூர்வமான ஒத்துழைப்பும், ஆதரவும் பாகனேரி மக்களுக்கு என்றும் துணைநிற்கின்றன. மேதகு மன்னர் அவர்களின் இசைவோடும், தேவஸ்தானத்தாரின் அனுமதியோடும் புல்வாய் நாயகி கோவிலையும், பிற கோவில்களையும் பாகனேரி நாட்டார் - நகரத்தார்கள் மேற்பார்வை செய்து சிறப்பானமுறையில் நிர்வகித்து வருகிருர்கள்.

● ●



# இந்தியப் பண்பாட்டில் தேர்

நமது பண்பாட்டில் தேர்பெறும் பங்கை ஆராயப் புகுந்தால் அது ஒரு தனிநூலாக விரிந்து விடும். இருப்பினும் ஒரு சில கருத்துக்களை மட்டும் இங்கே பார்ப்போம்.

சக்கரத்தை உருவாக்கிப் பயன்படுத்தக் கற்றுக்கொண்டதை மனிதன் முதன்முதலாக நிகழ்த்திய விஞ்ஞான சாதனைகளுள் ஒன்ருகப்போற்றுவார்கள். காலால் நடந்தவன் கட்டைவண்டிப் பயணம் செய்யத் தொடங்கிய நாளை வளர்ச்சித் திருநாளாக வரவேற்பார்கள். சக்கரம் கண்டுபிடிக்கப்பட்டபின் வண்டிகள், சப்பரங்கள், தேர்கள் என வாகன வசதி வகைவகையாக வளர்ந்தது. இந்த வளர்ச்சிப்படியில் மனித அறிவின் நுட்பமும் கலைநுகர்ச்சியும் ஒருங்கே திகழுமாறு தோன்றிய தேர்தான் அவனை வெற்றிப்படியில் ஏற்றியது!

கிறிஸ்து பிறப்பதற்குப் பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே வழக்கிலிருந்ததாகக் கருதப்படும் ரிக்வேதத்தில் கடையாணி முதலான தேர்ப்பகுதிகள் இடம் பெற்றுள்ளன. *கடோபநிஷத்

---

* ஆத்மானம் ரதினம் வித்தி
ஸரீரம் ரதமேவ து।
புத்திந்து ஸாரதிம் வித்தி
மன: ப்ரக்ரஹமேவ ச ||

இந்த்ரியாணி ஹயானுஹுர்
விஷயாம்ஸ்தேஷு கோசரான்।
ஆத்மேந்த்ரிய-மனோயுக்தம்
போக்தேத்-யாஹுர் மநீஷிண:

—கடோபநிஷத்து 3:3-4

தில் தேர், தேர்ப்பாகன், குதிரை என்பவை மனிதனின் உடல். புலன்களோடு ஒப்பிட்டுப் பேசப்பட்டுள்ளன. பௌத்தசமயத்தவரான பாகியான் என்னும் சீனப்பயணி 5-ஆம் நூற்றுண்டில் இந்திய நாட்டிற்கு வருகை புரிந்தார். இவர் தாம் கண்ட பௌத்த சமயத்தேரோட்டம் ஒன்றைப் பற்றித் தமது நூலில் எழுதியுள்ளதாக ஆராய்ச்சியாளர்கள் தெரிவிக்கின்றனர். மானசாரம் என்ற சிற்பநூலின் ஒரு பகுதியாகத் தேரிலக்கணமும் விரிவாகப் பேசப்பட்டுள்ளதாக அறிகிறோம்.

தேரும் தேரோட்டமும் பல்லாண்டுக் காலமாக நமது வாழ்வில் பங்குபெற்று வருபவை, வட்டத்தேர் சதுரத்தேர் என்ற பல வகையான மரத்தேர்களைக் கண்டதோடு நில்லாது நுண்கலைக்கு இருப்பிடமான தேர்வடிவத்தைக் கல்லிலும் நமது முன்னோர்கள் செதுக்கியிருக்கிறார்கள். மாமல்லபுரம் தாராசுரம், திருவாரூர், கும்பகோணம், விருத்தாசலம் போன்ற தமிழ் நாட்டு நகரங்களிலும், ஹம்பி, கொனராக் முதலான வட நாட்டுநகரங்களிலும் கண்ணுக்கும், கலைஉணர்வுக்கும் விருந்து வைக்கும் தேர்ச்சிற்பங்களை, தேர்வடிவ மண்டபங்களை நாம் இன்றும் காணலாம்.

நெடுநல் யானையும் தேரும் மாவும்
படையமை மறவரும் உடையம் யாம் (புறம் 72)

பண்டைக்காலப் படையமைப்பில் தேர்ப்படை வலிமை வாய்ந்த படையாகக் கருதப்பட்டிருக்கிறது. யானை மீதும் குதிரை மீதும் சென்றுத் போர்புரிவதைவிட தேரேறிச் சென்று போர் புரிவதுதான் அரச இலக்கணமாகப் போற்றப்பட்டிருக்கிறது. ஆனால் தேரில் இருந்து போர்செய்வது எல்லாராலும் முடியாது. இதில் வல்லுநர்களாக வாழ்ந்தவர்களை அதிரதர்கள், மகாரதர்கள் என்றெல்லாம் பட்டம் வழங்கி மகாபாரதம் பாராட்டுகின்றது.

வெள்ளுளைக் கலிமான் கவிகுளம்பு உளகத்
தேர்வழங் கினைநின் தெவ்வர் தேஎத்து
(புறம் 15)

என முதுகுடுமிப் பெருவழுதி என்னும் பாண்டிய மன்னன் பகைவர் நாட்டில் தேர்ப்படை நடத்திய திறத்தை நெட்டிமையார் என்னும் புறநானூற்றுப் புலவர் புகழ்ந்து பாடுகிறார்.

'நெடுந்தேர்க் கொடுஞ்சி பொலிய'ப் பாண்டியன் நெடுஞ்செழியன் தேர்மீது நின்ற திருக்கோலத்தை நெகிழ்ந்து பாடுவார் இடைக்குன்றூர் கிழார்.

இராமபிரான் தந்தையின் இயற்பெயர் என்னவென்றே நமக்குத் தெரியாது. பத்துத்திசைகளிலும் தேர்செலுத்தும் திறமை பெற்றிருந்த அவருக்குத் 'தசரதன்' என்ற சிறப்புப் பெயர் தோன்றியது. தசரதன் என்ற சிறப்புப்பெயர்தான் இன்றளவும் நின்று நிலவுகிறது.

இராமனும், இராவணனும் தேரேறிய சிறப்பை விரிவாகப் பாடவிரும்பி, 'இராமன் தேரேறு படலம்' 'இராவணன் தேரேறு படலம்', என்று தனித்தனிப் படலங்களையே கம்பர் வகுத்துக் கொள்கிறார்.

மகாபாரத யுத்தத்தில், ஆயிரக்கணக்கான தேர்கள் அணி வகுத்து நின்ற அற்புதக்காட்சியையும் அவை ஒன்றுக்கொன்று நிகழ்த்திக் கொண்ட கொடுமையான போரையும் நெஞ்சைப் பிணிக்கும் விதத்தில் வியாசரும் வில்லியும் நிகழ்த்தியிருக்கிறார்கள்!

கண்ணபெருமான், சல்லியன் போன்ற மகாபாரத வீரர்கள் போர்க்களத்தில் தேர் செலுத்தும் திறமைக்காகப் பெரிதும் சிறப்பிக்கப் பட்டிருக்கிறார்கள். திரிபுரதகனம் செய்ய எழுந்த சிவபெருமானும் தேரைத்தான் ஊர்தியாகக் கொண்டார்.

தேரை மையமாக வைத்து நடைபெறும் போர்க்கள நிகழ்ச்சிகளைப்பாடுவதற்காகப் பலதிணை துறைகளைப் புறப் பொருள் வெண்பாமாலை நிரல்படக் கூறியுள்ளது.

தேர் ஒரு படைக்கலமாக விளங்கியதோடு மிகச்சிறந்த வாகனமாகவும் பயன்பட்டிருக்கிறது.

தேரோட்டுவதில் நளமகராசன் திறமைசாலி. இவன் திறமையைப் புகழேந்திப் புலவர் மிக அழகாக விளக்குகிறார். அயோத்திமன்னன் இருதுபன்னனுக்குச் சாரதியாகி அவன் தேரை

நளன் செலுத்துகிருன். தேர் போகும் வேகத்தில் அயோத்தி மன்னன் இருதுபன்னனின் மேலாடை நழுவி விழுந்துவிடுகின்றது. ''மேலாடை வீழ்ந்தது; தேரை நிறுத்தி உடனே அதை எடு!'' என்று சொல்லவந்தானும் அயோத்திமன்னன். ஆனல் தேர் அதற்குள் நாலாறு காதம் கடந்து விட்டதாம்!

'மேலாடை வீழ்ந்தது; எடு', என்ருன் அவ்வளவில்
நாலாறு காதம் நடந்ததே! — தோலாமை
மேல்கொண்டான் ஏறிவர வெம்மைக் கலிச்சூதின்
மால்கொண்டான் கோல்கொண்ட மா.
(நளவெண்பா)

நாலாறு காதம் என்பது இன்றைய கணக்குப்படி 240 கற்கள் ஆகும். ஒரு சில விநாடிகளில் 240 கல் தொலைவு போய்விட்டதென்பது நிச்சயம் உயர்வு நவிற்சிதான். இருப்பினும், நளன் மிக வேகமாகத் தேரோட்டினுன்—விரைந்து செல்ல உதவும் வாகனமாகத் தேரே பயன்படுத்தப்பப்பட்டது — என்பதைக் கவிஞர் சொல்லியிருக்கும் முறை எண்ண எண்ண இனிப்பதாகின்றது!

நைடத ஆசிரியர், புகழேந்திப் புலவருக்குப் பிறகு தோன்றியவர். புகழேந்தி, 'மேலாடை வீழ்ந்தது; எடு'' என்பதற்குள் நளன் செலுத்தியதேர் நாலாறுகாதம் நடந்ததாகத்தான் பாடினுர்; நைடத ஆசிரியரோ பத்துயோசனை தூரம் பயணமாகிவிட்டதாகப் பாடுகிருர். ஒருயோசனை நூறுகல் தொலைவு என்பர். பத்துயோசனை என்ருல் அது ஆயிரம்கல் தூரமாகின்றது! நளன் செலுத்திய தேர் இருபதாம் நூற்ருண்டு 'ஜெட்' விமானங்களையும் மிஞ்சிவிடுகின்றது!

முத்த வெண்குடை வேந்தர்கோன்
முழவுஉறழ் தடந்தோள்
உத்த ரியம்அந் நெறியிடை
வீழ்தலும் உணர்ந்து,
'தந்து வாம்பரி நிறுவி,அத்
துகில்தருக என்ன—
பத்து யோசனை கடந்தது
தேர்!' எனப் பகர்ந்தான்! (நைடதம்)

'கடுந்தேர்க் குழித்த ஞெள்ளல்' என்ற புறநானூற்று வரியி

லிருந்து தேர்போகும் வேகத்தில் தெருக்கள் குழிபட்டுப் போன அருமையை உணருகின்றேம்! தேர்சேல்லும் அதிர்ச்சியில் கிளம்பிய தெருப்புழுதி மாடமாளிகைகளைப் புழுதிமயமாக ஆக்கிவிடுவதாகப் பட்டினப்பாலை குறைப்பட்டுக் கொள்ளுகின்றது;

*'சோறுவாக்கிய கொழுங்கஞ்சி*
*யாறுபோலப் பரந்தொழுகி*
*ஏறுபொரச் சேருகித்*
*தேரோடத் துகள்கெழுமி*
*நீருடிய களிறுபோல*
*வேறுபட்ட வினைஓவத்து*
*வெண்கோயில் மாசூட்டும்' (பட்டினப்பாலை)*

ஓரளவு வசதி படைத்திருந்த குடிமக்கள் கூடத்தேரையே தங்கள் வாகனமாகப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்கள், இக்கால இன்னியங்கிகள், மிதிவண்டிகள் போல அக்காலத்தில் தேர்களே எங்கும் இழைந்திருக்கின்றன என்பதைப் பின்வரும் மேற்கோட்பகுதிகளால் அறியலாம்:

*தாதுண் பறவை பேதுறல் அஞ்சி*
*மணிநா ஆர்த்த மாண்வினைத்தேரன்!*

*தண்துறை ஊரன் தேர்எம்*
*முன்கடை நிற்க எனவேட் டேமே!*

*யானும் தோழியும் ஆயமும் ஆடும் துறைநண்ணித்*
*தானும் தேரும் பாகனும் வந்தென் நலனுண்டான்!*

மனிதர்கள் மட்டுமா? கடவுள்கள் கூட வெவ்வேறு வகையான தேர்களையே ஊர்தியாகக் கொண்டிருக்கின்றார்கள்! சூரியபகவான் ஒற்றைச்சக்கரத் தேரில்தானே உலகை வலம் வருகின்றான்! மன்மதன் தென்றல் என்னும் தேரில் ஏறித் தானே தன் திருவிளையாடல்களை நடத்துகின்றான்!

அரசர்களின் செல்வச் செழிப்பைக் காட்டும் அளவுகோல்களுள் ஒன்றாகவும் தேர் விளங்கியிருக்கின்றது. தேரையே ஒரு செல்வமாக மதித்திருக்கிறார்கள். பாரிவள்ளல் முல்லைக்கொடிக்கு

மட்டும் தேரை வழங்கவில்லை. தன்னைப் பாடிவந்த புலவர் பெருமக்களுக்கும் தேரையே பரிசுப் பொருளாக வழங்கி யிருக்கின்றான்!

'வாரசும் பொழுகு முன்றில்
தேர்வி சிருக்கை நெடியோன் குன்றே'!

(புறம் 114)

அரசர்கள் திரைப்பொருளாகத் தேரைப் பெற்றுக்கொண்டிருக் கிறார்கள்; சூதில் பணயப் பொருளாக வைத்தும் விளையாடி யிருக்கிறார்கள்.

'சேயிழை மடவாரும்—பரிக்
தேர்களும் கொடுத்தவர் சிறுதொகையோ?'

'பொற்றடம் தேரொன்று வாலிகன்
கொண்டு கொடுத்ததும்—அதில்
பொற்கொடி சேதியர் கோமகன்
வந்து தொடுத்ததும்'—

'நன்றி ழைத்த தேர்கள்—போரின்
நடையு ணர்ந்த பாகர்
என்றி வற்றை எல்லாம்—தருமன்
ஈடு வைத்தி ழந்தான்'. (பாஞ்சாலி சபதம்)

'குருகுல விஜயன் கொடித்தேர்ப்பீடத்தில்' இருந்து கண்ணன் பகவத் கீதையை உபதேசித்தான். கண்ணனைத் தேரோட்டி யாகப் பாவிப்பதற்கு ஸ்ரீமத் சித்பவானந்த சுவாமிகள், "ரதத்தின் மீது அர்ஜுனன் ஏறியிருந்தான். அந்த ரதம் உடலுக்குச் சமானம்; அவன் ஜீவாத்மாவாகிறான். ரதமும் இயங்கியது. பார்த்தனும் போர் புரிந்தான். இயங்கியதைப் பற்றிய உணர்ச்சி ரதத்துக்கு இல்லை. சண்டை செய்ததைப் பற்றிய உணர்ச்சி அர்ஜுனனுக்கு இருந்தது. நிகழ்ந்தது தன்செயல் என்று எண்ணியிருந்த அப்போர் வீரன் அது உண் மையில் ஈசன் செயல் என்று உணர்ந்து கொள்ளக் கடமைப் பட்டிருந்தான். கிருஷ்ணன் தேர் ஓட்டினான்; ஆனால் ஆயுதம் எடுத்துப் போர் புரியவில்லை. அங்ஙனம் எல்லாருடைய ஹ்ரு தய கமலயத்திலும் அவன் சாக்ஷியாக வீற்றிருக்கிறான்', என்று தத்துவ விளக்கம் தருகின்றார்.

சங்கப்ருத் நந்தகீ சக்ரீ
சார்ங்க தன்வா கதாதர:
ரதாங்க பாணி: அக்ஷோப்ய:
ஸர்வ ப்ரஹரணாயுத:

பாகனேரி

# ஸ்ரீ புல்வாய் நாயகி அம்மன் திருத்தேர் - தேவாங்குலம்



# சித்திரத் தேர் விளக்கப் படங்கள்



ஸ்ரீ புல்வாய் நாயகி அம்மன்
புதிய சித்திரத்தேர்



டாக்டர் ராஜாசர் முத்தய்யா செட்டியார் அவர்கள்
புதிய சித்திரத்தேரை பார்வையிடுகிறார்கள்



விநாயகர்



ஸ்ரீ
புல்வாய்
நாயகி
அம்மன்



காமதேனு
வாகனத்தில்
மாரியம்மன்



ஆறுமுகக்
கடவுள்



அலங்கார
அம்மன்



சுப்பிரமணியர்
வள்ளி
தெய்வானை



விஜயலட்சுமி



ஆதிலட்சுமி



சந்தானலட்சுமி



வித்யாலட்சுமி

சோமசுந்தரர் மீனாக்ஷி கல்யாணம்



விஷ்ணு
இந்திரன்
நந்தி
மத்தளம்
வாசித்தல்
சுகர்
சந்திரன்
வியாக்கிர
பாதர் ரிஷி
பிருமா
பதஞ்சலி



பரமபதம் அனந்த சயனம் இராமர் பட்டாபிஷேகம்



8 கைகளுடன் வீரலட்சுமி

யானை வாகனத்தில்
தான்ய லட்சுமி



ஈஸ்வரர்
மாங்கனி
கொடுத்தல்
விநாயகருக்கு

அகோர
வீரபத்திரர்,
நாரதர், முருகன்
பார்வதி,
தக்கன், சூரன்.



காஞ்சி
காமாட்சி

ஆறு
கைகளுடன்
தனலட்சுமி



விஷ்ணு நடனம்

ஊர்த்துவதாண்டவம்



தந்தைக்கு
உபதேசம் செய்தல்



நடராஜர்
ஊர்த்துவ தாண்டவம் முயலகன்



விஸ்வேஸ்வரர் மனு மயை
வசிஷ்டர் சிற்பி துஷ்டா
உலகத்தை உண்டாக்கியவர்கள்



இராவணன் கயிலயங்கிரி
தூக்குதல்



கெஜலட்சுமி

இராமர்
பட்டாபிஷேகம்



நரசிம்மர்



கீதா
உபதேசம்

# தேர் செய்த கலைஞர்கள்



சோம. லெட்சுமண ஸ்தபதி
சிற்பங்களின் நுட்ப வேலைகளைக்
கவனிக்கிறார்.
உடன் நிற்பவர் அர்ச்சுனன் ஆச்சாரி



எஸ். ஏகாம்பர ஆச்சாரி



சுப்பிரமணிய ஆச்சாரி
ஒ. வாழவந்தான் ஆச்சாரி
சுப்பையா கொத்தனார்



சோ. வேலாயுதம் ஆச்சாரி

திருத்தேர் செய்த சிற்பி



சோம லட்சுமண ஸ்தபதி

விக்கிரஹங்கள் செய்த சிற்பி



எஸ். ஏகாம்பர ஆச்சாரி



கோவில் ஸ்தானிகர்கள்



சோம. லெட்சுமண ஸ்தபதி
பார்வையிடுதல்



எஸ். ஏகாம்பர ஆசாரி
சிற்பவேலை செய்தல்

எஸ். வேலு ஆசாரி
சிற்பவேலை செய்யும் காட்சி



சக்கரம் செய்யும் சிற்பிகள்





ஜெயலட்சுமி



ஸ்ரீ புல்வாய் நாயகி

ஆதிலட்சுமி



தீனலட்ச்மி — தானியலட்சுமி





விநாயகர் — அம்மன்



சுப்பிரமணி

இராமர் பட்டாபிஷேகம்—யோகநரசிம்மர்





உபபிட முகப்புத்தோற்றம்



ஸ்ரீ புல்வாய் நாயகி

கீதோபதேசம்



என்ற 'விஷ்ணு ஸஹஸ்ரநாம' சுலோகத்தில் 'ரதாங்க பாணி' என ஒரு சொல் வருகின்றது. இச்சொல்லுக்குப் பொதுவாகச் சக்ரதாரி—சக்ராயுதம் ஏந்தியவன் என்றே எல்லாரும் பொருள் கொள்வார்கள். ஆனல் அமரர் ராஜாஜி அவ்வாறு பொருள் கொள்வதை மறுத்து, பக்தனின் வாழ்க்கைச் சகடம் (ரதம்) பூமியில் அழுந்திப் போய்விடாது பகவான் கைகொடுத்துக் காத்துவுதகின்ருன் என்பதையே ரதாங்க பாணி என்ற பதம் குறிப்பதாக விளக்கியிருக்கிருர்கள்.

தமிழனுக்கு நன்ருகத் தெரிந்த வாகனம் ரதம். ரதம் போகும் வேகத்தில் தன் மனம் போகும் போது அதை மனோரதம் என்று சொன்னன். வானில் பறந்து செல்லும் ஊர்திக்கு வானரதம் என்று பெயர் சூட்டினன். (புகை வண்டியைப் புகைரதம் என்றும் சிலர் வழங்கியிருக்கிருர்கள்.)அறிவையே வாகனமாகக் கொண்டு அண்ட கோடிகளை அளக்க ஒரு ஞானரதத்தையும் அவன் படைத்துக் கொண்டான். 'சிறுதேர் உருட்டல்' என்ற ஒரு பிள்ளைத்தமிழ்ப்பருவத்தைவகுத்துக்கொண்டதோடு அமையாமல் 'ரதபந்தம்' என்ற பெயரில் சித்திரகவிகள் தீட்டியும் தமிழ்ப்புலவன் மகிழ்ச்சி அடைந்திருக்கிருன், பெரும்பாலான ஆலய கோபுரங்கள் ரதம் போன்ற வடிவில் தான் கட்டப்பட்டுள்ளன.

இடைக்காலச் சமய எழுச்சியின் விளைவாக நமது ஆலயங்களில் ஆண்டுதோறும் திருவிழாக் கொண்டாடும் பழக்கம் தோன்றியது. கோயில் விழாக்களில் எத்தனையோ விதமான வாகனங்கள் இடம்பெறுகின்றன. ஆனல் தேருக்கும் தெப்பத்திற்கும் உள்ள மதிப்பு—வரவேற்பு மற்றவைகளுக்கு இல்லை. தெப்பத் திருவிழா நடத்த அகலமான நீர்நிலைகள் தேவை. மழை குறைந்தால், தண்ணீர் இல்லாவிட்டால் தெப்பம் நிறுத்தப்பட்டுவிடும். தேரோட்டம் நடத்த ஓரளவு இடவசதி இருந்தால் போதும். சைவ வைணவக் கோயில்கள் மட்டுமல்ல பெரும்பாலான கிராம தேவதைகள் கூட இன்று முறையாகத் தேரோட்டம் காணுகின்றன,

தேரை அடிப்படையாக வைத்துப் பழமொழிகள் தோன்றியுள்ளன, 'ஊர் கூடித்தானே தேரிழுக்க வேண்டும்?' என்பது

அவற்றுள் ஒன்று. ஆம், ஊரை ஒன்றுபடுத்தும் மகத்தான சாதனம் தேர். நமக்குள் இருக்கும் வேற்றுமைகளை மறந்து ஆண்டுக்கு ஒருமுறையாவது கலந்து பழகத் தேரோட்டம் வாய்ப்பளிக்கின்றது. நடைமுறையில் தேரோட்டம் பலகுழப்பங் களுக்குக் காரணமாகிவிடுகிறதென்ருல் அது தேரின் குறையா காது. ஊரின் குறை; நம் உள்ளத்தின் குறை. தன்முனைப் பையும், வீண்செருக்கையும், சுயநல மனப்பான்மையையும் மாற்றிக்கொண்டால் தேரோட்டங்களை ஏன் அமைதியாக நடத்தமுடியாது?

தேர் என்ற உடனே திருவாரூர் தான் எல்லோருக்கும் நினை வுக்கு வரும். திருவாரூரில் கோயில்கொண்டிருக்கும் தியாக ராசர் அருட்களஞ்சியம்! அவர் ஏறி உலா வரும் தேரோ கலைக் களஞ்சியம்! இத்தனை நாள் ஓடாதிருந்த திருவாரூர்த்தேர் கூட ஓடத் தொடங்கிவிட்டது. இனி ஓடாத தேர்கள் யாவும் ஓடும்; உலகம் என்ற தேரும் நல்ல 'நிலை'க்குச் சேரும்.

பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் பிற்காலப் புலவர். வாக்கு நலம் மிக்க வரகவி. பல பிரபந்தங்களை அருளியிருக்கும் இப் பாவலர் ஒரு முறை திருவரங்கத் தேரோட்டத்தின் போது அரங்கன் தேரை ஆர்வமுடன் பார்த்தார். பாடல் பிறந்தது;

*ஒன்றும் அறியாத ஊமர்காள்! தென்னரங்கர்*
*இன்று திருத்தேரில் ஏறினர்! – நின்று*
*வடம்பிடிக்க வாருங்கள்! வைகுந்த நாட்டில்*
*இடம்பிடிக்க வேண்டுமென்றக் கால்.*

வடம்பிடித்து அரங்கன் தேரை இழுப்பவர்களுக்கு வைகுந்த நாட்டில் இடம் கிடைக்குமாம். இது பிள்ளைப்பெருமாள் தரும் உறுதிமொழி.

பாகனேரியில் ஸ்ரீ புல்வாய் நாயகி இன்று திருத்தேர் ஏறு கிருள். இவள் ஏறும் தேர் புதிய தேர். மிக இனியதேர். பேய்த் தேராய் அலைக்கழிக்கும் உலக மாயைகளிலிருந்து நம்மைக் கடைத் தேற்றும் பெருந் தேர். பேரின்பத்தேர்.

அம்பிகையின் தேருக்கு வடம் பிடிப்போம். அவள் சரணரவிந் தத்தில் நிரந்தரமாக இடம்பிடிப்போம். ●






# வெள்ளோட்டம் காணும் வெற்றித் தேர்

ஆலவட்டங்கள், அசைந்தாடும் மாலைகள், மடல்விரிந்த தாழைகள், மாவிலையின் தோரணங்கள், கரும்புகள், கனிசுமந்த வாழைகள், இளநீர்கள், ஈச்சங்குலைகள், என எண்ணரிய அலங்காரங்களாடு, ஆதிமகாசக்தியான அரும் பொருளையும் சுமந்துகொண்டு —

அரங்கேற்றத்துக்குக் காத்திருக்கும் அற்புத இலக்கியமாக வெள்ளோட்டத்தை எதிர்நோக்கி நிற்கிறது இந்த வெற்றித் தேர்!

மங்கல வாத்தியங்கள் முழங்க, மஞ்சளும் குங்குமமும் மணம் பரப்ப,மாலைகளாலும், கூரைச்சேலைகளாலும் (கொடுங்கைகளாலும்) ஒப்பனை செய்து கொண்டு—

மணவறையை எதிர்நோக்கும் ஒரு புது மணப் பெண் போல நிற்கிறது இந்த மகாரதம்!

மனிதராசியில் கர்ப்பவாசம் என்பது பத்து மாதமே. ஜீவராசிகளின் கர்ப்பவாசமும் ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு மட்டுமே. ஆனல் கலைப் பொருள்களின் கர்ப்பவாசத்திற்கு

நாம் கால கணிதம் செய்ய இயலாது. சில 'ரிஷி கர்ப்ப'மாக உடனே பிறந்துவிடும்! சில நித்திய கர்ப்பமாகக்காட்சியளித்து பிரசவமாகாமலேயே - சீரணமாகிவிடும்!

முப்பது மாதங்களுக்கு முன் கருக்கொள்ளப் பெற்ற இந்தக் கலைக்குழந்தை படிப்படியாக வளர்ச்சி எய்தி முழுவடிவம் அடைந்து முறைப்படி இன்று பூபதமாகின்றது!

ஆம்.

சென்ற சாதாரண ஆண்டு ஆவணித் திங்கள் 19 - ஆம் நாள் (4—9—1970) திருத்தேர்த் திருப்பணி தொடங்கப்பெற்றது. எத்தனையோ இடர்பாடுகள் — முட்டுக் கட்டைகளையெல்லாம் வெற்றிகொண்டு நிகழும் பரிதாபிஆண்டு தைத்திங்கள் 26ஆம் நாளாகிய (8—2—1873) இன்று இது வெள்ளோட்ட விழா காணுகின்றது.

மகாரதப் பிரதிஷ்டையாகும் இந்த மாணிக்கத் தேர் சிற்ப சாத்திர நுட்பங்கள் அனைத்தையும் தன்னகத்தே கொண்ட ஒரு நுண்கலைக்களஞ்சியமாகத் திகழுகின்றது இதன் அமைப்புக் களையும் — சிறப்புக்களையும் சற்றே அருகில் சென்று காண வேண்டாமா?

சக்கரங்கள், ஆர், தட்டு, பார், கொடிஞ்சி, கூம்பு, கிடுகு, குதிரைகள் என்று சொல்லப்படும் தேர் உறுப்புகள் ஒவ்வொன்றும் எவ்வளவு கச்சிதமாக — கணக்காக — கலைநுட்பத்தோடு காணும் கண்களைக் கண்டபடியே நிறுத்திக்கொள்ளும் வண்ணத்தில் அமைந்துள்ளன பாருங்கள்!

பூமி, வானம், சொர்க்கம் என்ற மூன்று உலகங்களையும், மூன்று உலகத்தின் இயல்புகள்—வாழ்க்கை முறைகளையும் சித்திரிக்குமாறு தேர் அமையவேண்டும் என்பார்கள். அரசன் கொலுவிருத்தல், உழுதல், நடன நாடகங்கள், சிருங்காரரசத்தோற்றங்கள் என்னும் உலக இயல்புகள் முதற்படியாகிய பூவுலக வாழ்க்கையில் அடங்கும். இரண்டாம்படியாகிய தேவலோக வாழ்க்கையில் கின்னரர்கள், அரம்பையர்கள், இந்திரசபை,

கற்பகத்தரு, காமதேனுப்பசு,முதலிய விண்ணுலகச்சிறப்புக்கள் வடித்துக் காட்டப்படும். இறுதிப்படியான சொர்க்கலோக வாழ்க்கையைத் தெய்வச்சிற்பங்கள், தெய்வங்கள் நிகழ்த்தும் திருவிளையாடல்கள், திருக்கயிலை, பரமபதம், பிரம்மலோகம் முதலியவை கொண்டு வெளிப்படுத்திக் காட்டுவார்கள். இது தேர்க்கலை அறிந்தவர்கள் சொல்லும் இலக்கணம். இந்த இலக்கணம் சிறிதும் வழுவாதபடிச் செதுக்கிச் சேர்க்கப்பட்ட தேர் இதோ நம் கண் முன் காட்சியளிக்கிறது. இன்னும் கொஞ்சம் அருகில் போவோம். என்னென்ன மரங்கள் பயன் படுத்தப்பட்டுள்ளன, எத்தனை வகையான சிற்பங்கள் இடம் பெற்றுள்ளன என்று பார்ப்போம்.

சிற்பசாத்திர விதிகளின்படிப் பார் விதானம், உபபீடம், அதிஷ் டானம், பேரூர் மட்டம், நாடகாசன மட்டம், தேவாசனம், சிம்மாசனம் என்பவை அமைந்துள்ளன. இவைகளில் பார் மட்டம் வேங்கை மரத்தாலும், உபபீடம் இலுப்பைமரத் தாலும், சித்தூர்மட்டம் இலுப்பை வேங்கைமரங்களாலும், பேரூர்மட்டம் நாடகாசன மட்டம் என்பனவும் இலுப்பை வேங் கை மரங்களாலும், தேவாசன, சிம்மாசனங்கள் இலுப்பை, தேக்கு மரங்களாலும் உருவாக்கப்பட்டுள்ளன. சிம்மாசன மட்டத்தில் சந்தன மரமும் பயன்படுத்தப்பட்டுள்ளது.

இனி, தேரின் வர்க்கங்களைப் பார்ப்போம். 1. பூதப்பார் 2. குமுத அடுக்கு 3. மகர அடுக்கு 4. பத்ம அடுக்கு 5. கஜ வர்க்கம் 6. வேதியல் அடுக்கு 7. கண்ட அடுக்கு விக்கிரகங்கள் 8. கபோதக அடுக்கு — இவைகளோடு உபபீடம் நிறைவடை கிறது. இனி அதிஷ்டானத்தில், 9. புதைவடை அடுக்கு 10. கண்ட அடுக்கு 11. சிறிய வேதியல் 12. ஜகதி அடுக்கு என்பன அமைகின்றன. தொடர்ந்து 13. பேரூர்ப்படிமங்கள் 14. படலை அடுக்கு 15 குமுத அடுக்கு 16. பத்ம அடுக்கு 17. கண்ட அடுக்கு விக்கிரகங்கள் 18, வேதியல் அடுக்கு 19. கபோதக அடுக்கு — நாடகாசனம் முடிவடைசிறது. தொடர்ந்து தேவாசனத்தில் 20. பத்ம அடுக்கு 21. வேதி யல் அடுக்கு 22. கண்ட அடுக்கு 23. வேதியல் அடுக்கு 24. கபோதக அடுக்கு. சிம்மாசனத்தில் 25. ஜகதி அடுக்கு

26. கண்ட அடுக்கு விக்கிரகங்கள் 27. கபோதக அடுக்கு என்பன இடம் பெறுகின்றன.
தேரை வலமாகச் சுற்றி வருவோம்: கீழிருந்து மேலாக ஒவ்வொரு மட்டத்திலும் கலை நுட்பத்தோடு செதுக்கப் பட்டுள்ள சிற்பங்களை நோக்குவோம்.
பார் மட்டத்தில் பக்கவசத்தில் இரண்டு பூதங்கள். முன்வசத்தில் இரண்டு சங்குப் பூதங்கள். ஒரு விநாயகர் படிமம். ஒரு முருகர் படிமம். மத்தியில் புல்வாய் நாயகி படிமம். பின்வசத்தில் சங்குப் பூதம் நான்கு. மத்தியில் திருமகள். பூதப்பார் வரிசையில் தென்புறத்தில் 11 பூதங்களும், இரண்டு ராட்சசத் தலைகளும், வடபுறத்தில் 11 பூதங்களும், இரண்டு ராட்சசத் தலைகளும் இருக்கின்றன.

உபபீடத்தில் யானை வர்க்கங்கள் 88. மகர வர்க்கங்கள் 36 சித்தூர் மட்டத்தில் குதிரைகள் 36. விநாயகர், புல்வாய் நாயகி, புல்வாய் நாயகி அலங்கார அம்மன், சுப்பிரமணியர், குண்டோதரன், பதுமநிதி, துவார சக்தி, பைரவர், கோவர்த்தனகிரி, பெரியகருப்பர், வள்ளிசாந்தி, நவமணி சக்திகள் குகாம்பிகை, கஜகௌரி, காமாக்ஷி, குண்டோதரன், வள்ளி சாந்தி, அய்யனர், அய்யனர் உற்பத்தி, துவார பாலகர், குண்டோதரன் 2, பிரம்மா, நடராஜர், கல்யாணசுந்தரர், மஹாவிஷ்ணு, குண்டோதரன் 2, துவார பாலகர், பஸ்மாசுர வதம், பூதகி பால் கொடுத்தல், வள்ளிசாந்தி, குண்டோதரன், சண்டிகேசுவரி, மாரியம்மன், மகிஷாசுரவத துர்க்கை, சாமுண்டேஸ்வரி, வள்ளி சாந்தி, சின்ன கருப்பர், காளிங்கநர்த்தனம், தட்சிணமூர்த்தி, துவாரசக்தி, சங்கநிதி, குண்டோதரன். இந்தச் சிற்பங்கள் 12″×8″ என்ற அளவில் அமைந்தவை.

பேஞர் மட்டத்தில் நெட்டாங்கு தலைப்புகள் 20. நெட்டாங்கு சிங்கங்கள் 12. விநாயகர், புல்வாய் நாயகி, மகிஷாசுரமர்த்தனி, காமதேனு வாகனத்தில் மாரியம்மன், ஆறுமுகக்கடவுள், கீதோபதேசம், விஸ்வேஸ்வரர், அகோர வீரபத்திரர், விநாயகர் கனிபெறுதல், யோக நரசிம்மம், இராமர் பட்டாபிஷேகம், அனந்த சயனம், பரமபதம், நரசிம்மம் தூணைப் பிளந்துதோன்றுதல், ஏகபாத திரிமூர்த்திகள், அகலிகை சாபவிமோசனம்,

பிட்சாடனார், மார்க்கண்டேயர், சிவனருள் பெறும் காலசம்ஹார மூர்த்தி, பிரும்மா தாளம் போடுதல், காளி தாண்டவம், ஊர்த்துவ தாண்டவம், குழலூதும் திருமால், நந்தி மிருதங்கம் வீரட்டேஸ்வரர், தத்தாத்ரேயர், பிரிங்கிமோட்சம், அர்த்த நாரீஸ்வ்ரர்; ஐந்து சிற்பங்களில் மீனாட்சி கல்யாணம், சாமி நாதர், இராவணன் கைலே தூக்குதல், மகிஷாசுரமர்த்தனி, திரிபுரசம்ஹாரம். இந்தப் படிமங்கள் யாவும் 21″×12″ அளவில் அமைந்தவை.

நாடகாசனத்தில் 12″×4″ அளவில் சிம்மக்கட்டைகள் 36. 12″×8″ என்ற அளவில் அமைந்த விக்கிரகங்கள்: சுப்பிரமணியர், சரஸ்வதி, துர்க்கை, மாரியம்மன், புல்வாய் நாயகி, காமாக்ஷி, மஹாலக்ஷ்மி, விநாயகர், பெரியாழ்வார், ஆண்டாள், பேயாழ்வார், பூதத்தாழ்வார், திருமழிசையாழ்வார் மணவாளமாமுனி, குலசேகராழ்வார், கருடாழ்வார், மச்சாவதாரம், கூர்மாவதாரம், வராகாவதாரம், நரசிம்மாவதாரம், வாமனாவதாரம், பரசுராமாவதாரம், ராமாவதாரம், பலராமாவதாரம், கிருஷ்ணாவதாரம், கல்கி அவதாரம், ஆஞ்சநேயர், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார், திருப்பாணாழ்வார், கூரத்தாழ்வார், பொய்கையாழ்வார், சரஸ்வதி அண்ணாமலையார், சங்கரநாராயணர், அன்ன வாகனத்தில் அம்மன், சோமாஸ்கந்தர், குஞ்சிதபாத நடராசர், சண்டிகேசுவரர், மகாலக்ஷ்மி, கோவர்த்தனகிரி, சிருங்காரரச லீலேச் சிற்பங்கள் 2, வேணுகோபாலர், திருமங்கையாழ்வார், பெரியாழ்வார், பட்டினத்தார், குங்கிலியக்கலய நாயனார், தடாதகைப் பிராட்டி, மாணிக்கவாசகர், சுந்தரர், வீணாதட்சிணாமூர்த்தி, கருமாரியம்மன், காளீஸ்வரர், கங்காதரர், அப்பர் சம்பந்தர் சம்பந்தருக்கு ஞானப்பால் ஊட்டுதல், சிவபாத இருதயருக்குக் கைலேக் காட்சி, கண்ணப்பர், ஔவைக்கு விநாயகர் கயிலே காட்டுதல், அகத்தியர் கமண்டலத்தைக் காக்கைக் கவிழ்த்தல், கஜேந்திர மோட்சம், காஞ்சிகாமாக்ஷி பூஜை, திருவானைக்கா ஜம்புகேசுவரர்.

தேவாசனத்தில் சந்திரபகவான், புல்வாய்நாயகி, மாரியம்மன், வருணன், புல்வாய்நாயகி சூரியபகவான், கௌதமர் வாயு பகவான், மிருகண்ட முனிவர், விஸ்வாமித்திரர்,

வசிஷ்டர், குபேரன், அத்திரி, காசிபர்; பதஞ்சலி, ஈசானர், வியாக்ரபாதர், சந்திரன், இந்திரன், சூரியன், சுகப்பிரம்ம ரிஷி, அக்கினி, பிருங்கரிஷி, ஒரு முனிவர், ஆங்கீரசர், யமன் ஒரு முனிவர் மற்றுமொரு முனிவர், நிருருதி, ஒரு முனிவர் என்று படிமங்கள் அமைகின்றன.

சிம்மாசனத்தில் விநாயகர், சந்தானலட்சுமி, விஜயலட்சுமி, வித்யாலட்சுமி, மீனாட்சி, தனலட்சுமி, காமாட்சி, ஆதிலக்ஷ்மி, தான்யலட்சுமி, வீரலக்ஷ்மி, சுப்பிரமணியர் மகாலட்சுமி என்றி வ்வாறு 15"×12" என்ற அளவில் படிமங்கள் உள்ளன. சிம் மங்கள் எட்டும் 15"×8" என்ற அளவின.
குச்சவிக்கிரங்கள் 15"×9" என்ற கணக்கில் செதுக்கப்பட்ட வை. இவைகள் வருமாறு: புல்வாய்நாயகி, மஹிஷாசுரமர்த்தனி 2, பெரியகருப்பர், சின்னக்கருப்பர், நாரதர், கிம்புருவர், யாழ் மீட்டும் கந்தருவப் பெண்கள் 2.

நாடகாசனமட்டத்தில் ஐந்துதலையுடன் உள்ள பிரமாணி படிம மும், பிரமாணி சாரத்தியம் செய்யும்முறையில் இரண்டு அலங் கார வெள்ளைக்குதிரைகளும் கம்பீரமாகக்காட்சியளிக்கின்றன. ஆயுள் காப்பீட்டுக் கழகச் சார்பாளராக விளங்கும் திரு. அரு. கதி. இராமநாதன் செட்டியார் அவர்கள் மத்திய பிரதேச துர்க்நகர் பிலாய் உருக்காலைக்கு நேரில் சென்று, தம் நண் பரும் உருக்காலைத் தலைமை மேலாளருமான திரு. ஜகத்பதி ஐ. ஏ. எஸ், அவர்களின் மேலான ஆதரவோடு புதிதாகச் செய்து வாங்கிவந்த மூன்று இரும்பு அச்சுக்களில் ஆறு சக்கரங் கள் இணைக்கப்பட்டுள்ளன.

பூமியிலிருந்து சிம்மாசனம் வரையில் சுமார் 16¾ அடி உயர முள்ள இந்தத் தேருக்கு 2.000 கனஅடிமரமும், 9 டன் இரும் பும் பயன்படுத்தப்பட்டுள்ளன. குரோமியப்பூச்சோடு கூடிய வெண்கல மணிகளும், பித்தளைக் குமிழ்களும் தேரின் உறுப் புக்களை அலங்கரிக்கின்றன.

தேரையும், அதன் பாகங்களையும் முறையாகப் பார்த்தோம் தேரின் புறத்தோற்றத்தையும், சிற்ப விசித்திரங்களையும் மட்டு மே நம்மால் கண்டுகளிக்க முடிகிறது. இதன் அகப்பகுதி அறி

வியல் நுட்பத்தோடு அமைக்கப்பட்டுள்ள அருமையை நிர்மாணப்பணி, நடக்கும்போது அருகில் இருந்தவர்களே அறிய முடியும். முட்டுக்கட்டை கொடுத்துத் தேர் திருப்பப்படுவதாலும், பல ஏற்ற இறக்கங்களை அது கடக்க நேருவதாலும் ஏற்படும் குலுக்கல், அதிர்ச்சிகளால் கட்டுமானம் நெகிழ்வடைவதுண்டு. இந்த நெகிழ்ச்சியையும், காலப் போக்கில் ஏற்படும் தளர்ச்சிகளையும் தடுப்பதற்காகத் தேர்ப்பீடங்களும், பிற உறுப்புக்களும் அறிவியல் நுட்பப்படிச் செறிவாக, மிகவும் இறுக்கமாக இணைக்கப்பட்டுள்ளன. இரும்புத் தகடுகளும் பட்டங்களும் இணைப்புக்காகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. புறக்கவர்ச்சி மட்டுமே உடைய பொருள்களால் நிலைத்த பயன் கிடைப்பதில்லை. புறத்தில் அழகும் அகத்தில் நல்ல உறுதியும் உடைய இந்தத் தேர் நிலைபேறுடைய தேர் — நீடூழிக்காலம் ஸ்ரீ அம்பாள் பவனி வரப் போகும் தேர் என்பதில் ஐயமில்லை.

பணவசதி இருந்தால் யாரும் தேர் செய்யலாம். ஆனால் இத்தகைய அறிவியல்-பொறியியல் நுட்பங்களோடு அமைந்த தேர் அங்குலம் அங்குலமாக ஆழ்ந்த அக்கறையோடு செயலாளர் திரு. கிருஷ்ணன் செட்டியார் அவர்கள் முயற்சியால் சேர்க்கப்பட்ட தேர், ஆணிகளை இறுக்குவதிலிருந்து அலங்காரக்குதிரைகளைச் செதுக்குவது வரையில் கவனத்தோடும் கண்காணிப்போடும் செய்யப்பட்ட தேர் தமிழ்நாட்டில் அதிகம் இல்லை என்று துணிந்து கூறலாம்.

கலைப்படைப்புக்களைப் பாராட்ட நினைப்பவர்கள் 'காணக்கண் கோடி வேண்டும்' என்பார்கள்.

இது பலரால், பல இடங்களில் பயன்படுத்தப்பட்ட தொடர்; பாராட்டுவாசகமாக ஒரு வாய்பாடு போல மீண்டும் மீண்டும் சொல்லப்பட்ட தொடர்; ஆயினும் நினைத்துப் பார்க்க வேண்டிய பொருட்சிறப்புடைய தொடர்.

பாகனேரித் தேரைப் பார்க்கும் வாய்ப்புக் கிடைத்தவர்கள் அதைப் பாராட்டாதிருக்கமாட்டார்கள். பாராட்ட எண்ணும் நமக்கும் 'காணக் கண் கோடி வேண்டும்' என்ற தொடரே பொருத்தமான தொடராகத் தோன்றுகிறது. நமக்கிருக்கும் இரண்டு கண்களைக் கொண்டு இந்தத் தேரின் முழு அழகையும்

பருக நினைப்போமானால் அதற்கு ஒருநாள் போதாது! பாராட்டி எழுத இதுபோன்ற ஒரு நூல் காணாது!

இராமபிரான் தோற்றப் பொலிவைப் புகழ்ந்து பாட வந்த கம்பநாடர்,

"தோள்கண்டார் தோளே கண்டார்
தொடுகழற் கமலம் அன்ன
தாள்கண்டார் தாளேகண்டார்;
தடக்கைகண் டாரும் அஃதே;
வாள்கொண்ட கண்ணார் யாரே
வடிவத்தை முடியக் கண்டார்!"

என்று பாடினார்.

இராமபிரானின் அங்கங்கள் அழகுமயமானவை. அந்த அழகனின் உடல் உறுப்புக்கள் பார்த்த கண்கள் பார்த்தபடியே இருக்கத் தங்கள்பால் ஈர்த்துக் கொள்ளக்கூடியவவை; புறம் போக விடாதவை. அவ்வாறே வெள்ளோட்டம் காணும் இந்த வெற்றித்தேரின் உறுப்புக்களும் அழகின் சிரிப்புக்களாக விளங்குகின்றன. பகுதியழகு, தொகுதியழகு என்று இருவகையழகும் நிரம்பப்பெற்ற இதன் சௌந்தர்யத்தையும் யாரும் முழுமையாகப் பார்த்து முடிக்க முடியாது!

எங்கோ ஒரு மூலையில் பதிக்கப்பட்ட சிற்பம் கண் சிமிட்டி அழைக்கும். அருகில் போவோம்; அதன் அழகில் ஈடுபடத் தொடங்கிவிட்டால் நம் கண்கள் அங்கேயே நிலைத்து விடும்; அந்த இன்பத்திலேயே லயித்து விடும்! பிறகு மற்ற படிமங்களை என்று பார்ப்பது? தேரின் முழு அழகையும் எவ்வாறு பார்த்து முடிப்பது?

இந்தத் தேர் கலையன்பர்களுக்கு ஓர் அதிசயம்; பக்தகோடிகளுக்கு ஒரு பரவசமான அனுபவம்!

தித்திப்பான இந்த அனுபவத்தை — கலையுலக அதிசயத்தை நமக்கு வழங்கிய கலைஞர்களை இனி வரும் பக்கங்களில் அறிமுகம் செய்து கொள்ளுவோம்.



# கைவண்ணம் காட்டிய கலைஞர்கள்

கண்ணைக்கவரும் மாடமாளிகைகளையும், விண்ணைஅளக்கும் கூட கோபுரங்களையும் பார்க்கிறோம். பார்த்து அதிசயிக்கிறோம். அதிசயிக்கும்போது அவைகளின் உரிமையாளர்களைத் தான் பாராட்டுகிறோமே தவிர உருவாக்கிய கலைஞர்களை, தொழிலாளர்களை நினைத்துக் கூடப்பார்ப்பதில்லை.

சித்திரச் சோலைகளையும், மெத்தை விரித்தது போன்ற சாலைகளையும், தாமரை பூத்த தடாகங்களையும், யந்திரக் கூட்டங்களையும், இன்னும் எண்ணற்ற புவிப்பொருள்களையும் பாவேந்தர் பாரதிதாசனும் பார்த்தார். பார்த்துஅதிசயித்தார். அதிசயிக்கும் அந்த வேளையில் அவைகளை உருவாக்கிய தொழிலாளர்களையும், கலைஞர்களையும், அவர்கள்பட்ட அவ்திகளையுங் கூட நினைத்துப் பார்த்தார்:

*''சித்திரச் சோலைக ளே!உமை நன்கு*
*திருத்தஇப் பாரினிலே — முன்னர்*
*எத்தனை தோழர்கள் ரத்தம் சொரிந்தன*
*ரோ!உங்கள் வேரினிலே.''*

— என்று தொழிலாளர் — கலைஞர்களின் அவல வாழ்வை

நினைந்து கசிந்து கண்ணீர் மல்கினர்.

பெரும்பொருளைத் திரணமாக மதித்துச் செலவிட்டு அரும் பொருட்களை ஆக்கத் துணிந்தவர்கள் நமது வணக்கத்துக்குரியவர்கள். ஆனால் அழியும் பொருட்செல்வத்தைப் பெற்றுக் கொண்டு, அழியாத கலைச்செல்வங்களை உருவாக்கித் தரும் படைப்பாளிகளையும் நாம் பாராட்டவேண்டாமா?

இதோ, இந்தத் தேர் எவ்வளவு பெருமிதமாக நிமிர்ந்து நிற்கிறது!

மகர தோரணங்களும் மாணிக்க மாலைகளும் அசைய, ஆலவட்டமாகிய அழகுக் கைகளைநீட்டி, 'அருகே வாருங்கள்! அம்பிகையைப் பாருங்கள்!' என அழைத்தபடி எவ்வளவு அலங்காரமாக நகர்ந்து செல்கிறது!

இந்தத் தேரை உருவாக்கத் திருப்பணிக்குழு திட்டம் தீட்டியது; நிதி திரட்டியது; இரண்டு லட்சத்திற்கும் மேலாகச் செலவு செய்தது.

தீட்டிய திட்டத்தைச் செயல்படுத்தித் தந்த கலைஞர்களை நாம் தெரிந்து கொள்ள வேண்டாமா?

நினைத்தது நினைத்தபடி வடித்துக்கொடுத்த பூவுலகமயன்களைப் போற்றவேண்டாமா?

அந்த விஸ்வகர்மாக்களை இங்கே அறிமுகப்படுத்துகிறோம்;

பிரதம சிற்பி மாலைகண்டான் திரு. சோம. லக்ஷ்மண ஸ்தபதியார் தேர் நிர்மாணக்கலையில் பேர் பெற்றவர். சிற்ப சாத்திர விதிகளுக்கு இணங்க அறிவியல் நுட்பத்தோடு இந்தத் தேரை இவர் உருவாக்கித் தந்திருக்கிறார். இவர் பரம்பரைச் சிற்பி. அரசாங்கத்தின் அங்கீகாரம் பெற்றவர். பிரதமசிற்பி மாயூரம் திரு. எஸ். ஏகாம்பர ஸ்தபதியார் தேர்ப்படிமங்கள், விக்கிரகங்கள் செய்வதில் புகழ் பெற்றவர். கண்ணைக் கவரும் வண்ணச் சிற்பங்களைப் பார்த்தோர் வியக்கப் படைத்துக் கொடுத்திருக்கிறார்.

திருவாளர்கள் காரைக்கால் எஸ். தியாகராஜன், வெற்றியூர் சோம. சின்னத்தம்பி, மாலேகண்டான் சோம. வேலாயுதம் ஆசாரி, பட்டமங்கலம் வி. ராதாகிருஷ்ணன் ஆகியோர் தேர்ப் படிமங்களேத் தீர்வை செய்து நகாசு வேலே பார்ப்பதில் திற மைசாலிகள், சிற்பக்கலே நுட்பம் தெரிந்தவர்கள்.

திருவாளர்கள் கண்டரமாணிக்கம் சீ. பரமசிவம், புலிமலேப் பட்டி ந. முனிசாமி ஆசாரி ஆகிய இருவரும் விக்கிரகங்களேத் தீர்வை செய்வதோடு, இரும்பு வேலேகளிலும் புகழ் பெற்ற வர்கள்,

திருவாளர்கள் மாலேகண்டான் ப. ஆர்ஜுனன் ஆசாரி, பிரான் மலே கா. கனகசபை ஆசாரி, புலிமலேப் பட்டி சுப. முத்துக்கருப்ப ஆசாரி ஆகியோர் மட்டசுத்த வேலேகளில் மாண்புடையவர்கள். மேலும், திருவாளர்கள், மாலேகண்டான் சுப. இரத்தினஆசாரி மாலேகண்டான் சுப. சக்திவேல் ஆசாரி, திருவிடைமருதூர் ஆர். அருணுசலம் ஆசாரி, காரைக்குடி சுப. ரவி ஆசாரி, காரைக்குடி பெரி. சுப்பையா ஆசாரி, காரைக்குடி எஸ். ஞான வேல் ஆசாரி, வெற்றியூர் ஆர். நாகராஜனுசாரி, பள்ளத்தூர் வீர. ராமசாமி ஆசாரி. பாகனேரி அ. ராம. கணேசன் ஆசாரி,' நாட்டரசன்கோட்டை வெ. கருப்பையா ஆசாரி, காரைக்குடி மாணிக்கம் ஆசாரி, காளேயார்கோவில் ஒ. வாழவந்தான்ஆசாரி, தச்சம்பட்டி கரு. கண்ணப்பன், தச்சம்பட்டி சி. உடையார், பாகனேரி ஆதி. சத்தி ஆகியோரும் ஆர்வத்துடன் பணியாற்றி யிருக்கிருர்கள்.

பாகனேரியைச் சார்ந்த திருவாளர்கள் சுப. நடராஜன்ஆசாரி, சுப. ராமன் ஆசாரி, சுப. தியாகராஜன்ஆசாரி ஆகியோர் கல்-வேலே செய்திருக்கிருர்கள்,

காரைக்குடியைச் சார்ந்த திருவாளர்கள் அரு ராமசாமி ஆசாரி அரு. கா. பொன்னுச்சாமி ஆசாரி ஆகியோர் குதிரைகளே உரு வாக்கித் தந்திருக்கிருர்கள்.

இங்குக் குறிப்பிடப்பட்டிருக்கும் கலேஞர்கள் மதிநுட்பமும் தொழில் நுட்பமும் நன்கு வாய்க்கப்பெற்றவர்கள். தங்கள்

கைவண்ணம் முழுவதையும் காட்டி இந்த மகாரதத்தை உருவாக்கிய கலைஞர்களை மனமுவந்து பாராட்டுகிறோம். திருப்பணிக்குழுவினர் சார்பிலும், பாகனேரி மக்கள்—பக்தகோடிகள் சார்பிலும் நன்றி செலுத்துகிறோம். இவர்கள் கைவண்ணம் மேலும் வளர, பொருளும் புகழும் ஈட்டி வாழ்வில் இவர்கள் மேலும் மேலும் உயர ஸ்ரீ புல்வாய் நாயகியைப் பிரார்த்திக்கிறோம். இவர்களை வாழ்த்துகிறோம்.





# உதவி புரிந்த உத்தமர்கள்

''கல்யாணத்தைப் பண்ணிப் பார்; வீட்டைக் கட்டிப்பார்'' என்பார்கள். இரண்டையுமே தொடர்புடைய எல்லோருக்கும் நிறைவு தரக்கூடிய விதமாக முடித்துக் காட்டுவது அரிது.

நாள் குறித்து எல்லா ஏற்பாடுகளையும் செய்த பிறகும் கூட ஒரு திருமணத்திற்கு எத்தனையோ இடையூறுகள் தோன்றும். அஸ்திவாரம் அமைத்து, நிலைகளை நிறுத்தி, கூரைமூடும் அளவு வந்த பிறகு கூடப் பல வீட்டுவேலைகள் வீண் வேலையாக முடிந்திருக்கின்றன.

இந்த இரண்டு பழமொழிகளோடு மூன்றுவதாகத், ''தேரை இழுத்துப் பார்'', என ஒரு புதுமொழியையும் சேர்த்துக் கொள்ளலாம்! தேரை இழுத்து எவ்விதமான இடையூறும் இல்லாது நிலைக்குக் கொண்டு வந்து சேர்ப்பது அவ்வளவு அருமையான செயலாக உள்ளது.

இருக்கும் தேரைக் கொண்டு விழா நடத்துவதே இவ்வளவு கடினமாக இருக்கும்போது ஒரு புதிய தேரையே உருவாக்கும் திட்டம்—இன்றைய பொருளாதாரப் போக்குகளையும் மனங் கொண்டு பார்க்கும்போது— நினைத்துக்கூடப் பார்க்கமுடியாத, மலைப்பூட்டக் கூடிய சாதனையே ஆகும்.

இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு நம் உள்ளத்தில் வெறும் கனவுப் பொருளாக பவனி வந்த தேர் இன்று காட்சிப்பொருளாகக் கண் முன்னே கம்பீரமாக நிற்கிறது. வெளிப்படையாக இரண்டு அச்சாணிகளில் தான் இந்தத் தேர் வெள்ளோட்டம் காணப்போகிறது. ஆனால் மறைமுகமாக எத்தனை ஆயிரம் அச்சாணிகள்-அன்பு நெஞ்சங்கள் இந்த வெள்ளோட்டத்திற்குக் காரணமாக இருந்திருக்கின்றன! இந்த அச்சாணிகளை நாம் ஒரு முறை நினைத்துப் பார்க்க வேண்டாமா?

'கூடித் தொழில் செய்' என்பது பாரதி வாக்கு. பல நல்ல உள்ளங்கள் கூடித் தொழில் செய்து இந்தத் தெய்வ ரதத்தை உருவாக்கியுள்ளன. அந்த அருள் நெஞ்சங்களுக்கு, உதவி புரிந்த உத்தமர்களுக்கு நாம் நன்றி சொல்லவேண்டாமா?

**சிவகங்கை அரசர் மேதகு து. ச. கார்த்திகேய வேங்கடாசலபதி ராஜா அவர்கள் :**

"பேச்சில் மன்னர்; எழுத்தில் மன்னர்; சிந்தனையில் மன்னர்; செயல் திறத்தில் மன்னர்," என்றெல்லாம் மேதகு கார்த்திகேய மன்னர் அவர்களைப் பாராட்டுவார்கள். இவைகளில் மட்டும் தானா இவர் மன்னர்? கொடை புரிவதிலும் இவரே மன்னர்.

"கார்திகைக்க யாவர்க்கும் கல்வி மழை பொழியும்" கார்த்திகேயராக நமது மன்னரை ஒரு கவிஞர் புகழ்ந்துரைத்தார். கல்வியை மட்டுமல்ல, செல்வத்தையும் வரையாது வழங்கும் நம் மன்னருக்கு இப் புகழுரை போதாது என்றே தோன்றுகிறது. நாம் வானம் பார்த்த பூமியில் வாழ்பவர்கள். நாம் வானத்தையே பார்த்தமுகமாக இருக்க அது பல சமயங்களில் நம்மிடம் பாராமுகமாக இருந்தவிடுவதும் உண்டு. நமது மன்னரோ ஒருவேளையும் பாராமுகமாக இருப்பவரல்லர். இவர் உள்ளம், 'வான் பொய்ப்பினும் தான் பொய்யாத' காவிரி போன்றது. கங்கை போன்றது. காவிரி போலவும், கங்கை போலவும் கருணை சுரக்கின்ற உள்ளத்தோடு திருத்தேர்த் திருப்பணி வெற்றிபெறப் பலவகையாகவும் மேதகு மன்னர் அவர்கள் உதவியிருக்கிறார்கள்.

திருப்பணிக்குழுவினர் திருத்தேர் புதுப்பிப்பது குறித்து மன்னரைப் பேட்டி கண்டார்கள். பழைய தேர் சிதிலமாகி வருவதை

யும், புதிய தேர் விரைவில் உருவாகவேண்டிய அவசியத்தையும் எடுத்துக்கூறினார்கள்,

திருப்பணி தொடங்க மன்னர் அவர்கள் இசைவு தந்தார்கள்; சமஸ்தான நிதியிலிருந்து 20,000 வெண் பொற்காசுகளை நன்கொடையாகத் தந்தார்கள்; தமிழ்நாட்டு அறநிலைய ஆணையரிடமிருந்தும் 20,000 வெண்பொற்காசுகளைப் பெற்றுத் தந்தார்கள்; தேவஸ்தான மரங்களையும் தந்தார்கள்; அனைத்துக்கும் மேலாகத் தம் அன்பையும், ஆதரவையும் தந்தார்கள். அவர் கைகள் தந்து தந்து மகிழும் தந்தக் கைகள். தொட்டது மணக்கச் செய்யும் சந்தனக் கைகள். அவர் கைகளை வாழ்த்துகிறோம். கனிந்த திருவுள்ளத்துக்கு வணக்கம் செலுத்துகிறோம்.

மருக்கொழுந்து தான் இருக்கும் இடத்தை மட்டும் மணக்கச் செய்யும். 'தாயைக் குடல் விளக்கம் செய்த' இந்தத் தமிழ்க் கொழுந்தோ தான் இல்லாத இடங்களிலும் இனிய மணம் பரப்பும். பூவின் மணம் நிலையற்றது. மன்னரின் புகழ் மணமோ நிலையானது. நிரந்தரமானது.

அரசர் பல்லாண்டு வாழ அன்னை புல்வாய் நாயகியை வேண்டுகிறோம். அவர் புகழ் ஆல் போல் தழைத்து அறுகு போல் வேரோட அம்பிகையைப் பிரார்த்திக்கிறோம்.

மன்னர் திருவுள்ளத்துக்கிணங்கச் சென்னை அறங்காவலர் அலுவலகத்தோடு தொடர்புகொண்டு பொருளுதவி தேடித்தந்தும் மரங்களைக் கொடுத்தும், இன்னும் பலவாறாகவும் உதவிய சிவகங்கை சமஸ்தான தேவஸ்தானத்துக்கும் நம் நன்றி உரியது. திருப்பணி தொடங்கியபோது தேவஸ்தான மேலாளராக இருந்த திரு. ஆர். சுப்பிரமணிய அய்யர் அவர்களுக்கும் தற்போது மேலாளராக இருக்கும் திரு. என். பாலசுப்பிர, மணியன் அவர்களுக்கும் நன்றி பாராட்டுகிறோம்.

**திரு. குப. அரு. சி. கிருஷ்ணன் செட்டியார் அவர்கள்:** உயர்ந்த தருமசீலரும், சிவபக்தருமான திரு. அரு. கிருஷ்ணன் செட்டியார் அவர்கள் திருத்தேர்த் திருப்பணிக்குழுவின் செய

*யாவர்க்கு மாம்இறை வற்குஒரு பச்சிலை*
*யாவர்க்கு மாம்பசு வுக்குஒரு வாயுறை*
*யாவர்க்கு மாம்உண்ணும் போதொரு கைப்பிடி*
*யாவர்க்கு மாம்பிறர்க்கு இன்னுரை தானே.*

கடைப்பிடிக்க முடியாத எந்த அறமும் கட்டாயப்படுத்தப்படவில்லை. ஆனால் உள்ளன்போடு செய்யாத பூசைகளைக் கடவுள் கூட ஒப்புக்கொள்வதில்லை.

இதை விளக்க சுவாமி இராமதாசர் ஓர் அழகான கதையைச் சொல்லியிருக்கிறார்:

ஒரு கறிக்கடைக்காரர். நல்ல தெய்வ பக்தர். ஆட்டை வெட்டும் போதுகூட ஆண்டவன் நாமங்களை இவர் மறப்பதில்லை. கறித் துண்டுகளை நிறுக்கும் போதும், கூளங்களை ஒதுக்கும்போதும் கடவுள் தியானத்திலேயே இருப்பார்.

காலப்போக்கில் தாமேகொன்று வியாபாரம்செய்வதை நிறுத்தி விட்டார். வெளியிலிருந்து வாங்கி வந்த சரக்கை மட்டும் விற்றுப் பிழைத்து வந்தார்;

ஒருநாள் இவர் கடைப்பக்கமாகப் போகநேர்ந்த ஒருபிராமணர் இவர் தூக்கி நிறுத்துக்கொண்டிருந்த தராசை நோக்கினார். எடைக்கற்கள் கிடந்ததட்டில் ஒரு பளபளப்பான கூழாங்கல். அந்தக்கல்லைக் கழுவித் துடைத்துத் தரச்சொல்லி வாங்கிப் பார்த்தார்.

''அப்பா! இது சாளக்கிராமம்! பூசைக்குரியது. உன்னிடம் எப்படி வந்தது?''

''அப்படியா ஐயா! எனக்குத் தெரியாது. நான் பல வருடங்களாக எடைக்கல்லாக இதைப் பயன்படுத்தி வருகிறேன். உங்களுக்குத் தேவையானால் எடுத்துப்போங்கள்!''

பிராமணர் ஆடம்பரமாகப் பூசை செய்பவர். சாளக்கிராமத்தைத் தன் பூசையில் வைத்துக்கொண்டார்.

ஏனோ சாளக்கிராமம் இளைத்துக்கொண்டே போயிற்று.

பிராமணர் செய்த பூசையில் உள்ளன்பு இல்லை. பகட்டுக்காக வும், படாடோபமாகவும் நடைபெற்ற ஆராதனைகளை வெறுத்த சாளக்கிராம தெய்வம் பிராமணர் கனவில் தோன்றியது:

''என்னை என் மைந்தனிடமே கொண்டுபோய் விட்டுவிடு. அவன் செலுத்திய அன்பை என்னால் இங்கு காணமுடியவில்லை. இழிந்த தொழில் செய்தாலும் உயர்ந்த எண்ணங்களால் என்னை அவன் நீராட்டுகிறான். தான் செய்யும் வியாபாரத் துக்கு அவன் என்னை விளம்பர சாதனமாக ஆக்கிக் கொள்ள வில்லை. அவன் தொடும்போது நான் பரவசமாகிறேன். என்னை அவன் கறிக்கடையிலேயே இருக்க விடு.''

உள்ளன்போடு நடைபெறாத பூசையைக் கடவுள் ஒப்புக் கொள்வதில்லை. அவர் அன்புமயமானவர். அன்பையே எதிர்பார்ப்பவர்.

ஆனால் மனிதமனம் பலனை எதிர்பார்ப்பது. பலன் தராத நெல்லை மனிதன் விதையாகப் பயன்படுத்துவதில்லை.

மனிதனைப் புனிதனாக்கும் நோக்கத்தோடு நீதி நூல்கள் பல கருத்துக்களை வெளியிடுகின்றன.

அபிஷேகத்துக்காக இரண்டு இளநீர்களை உள்ளன்போடு கொடுப்பவன் மறுபிறவியில் இரண்டாயிரம் தென்னைகளுக்கு உரிமையாளன் ஆவானாம்.

ஒரு குடம் பாலை இப்போது வழங்குபவன் மறுபிறவியில் ஒரு நூறு பசுக்களை உடைமையாகப் பெறுவானாம்.

ஆழாக்கு அரிசியை நிவேதனத்துக்குத் தருபவன் ஆயிரம் வேலி நிலத்துக்கும் அதிபனாக முடியுமாம்.

வாடிய முகம்பார்த்து வயிற்றுக்குச் சோறுதருபவன் விதை போடாமலே அறுவடை செய்து குவிக்க முடியுமாம்!

ஆண்டவனைக் காட்டிக் காட்டித்தான் நம் முன்னோர்கள் அற உணர்வைத் தூண்டியிருக்கிறார்கள். நாம் இன்று ஆண்டவ

வயிரவத்தேவர், பெரி. நடராசத்தேவர், கா. வெ. கணபதித் தேவர், மு. அழகுபுலி அம்பலம் ஆகிய பெருமக்கள் அங்கம் வகித்தார்கள். நிதி, நெல் முதலியவை திரட்டுவதிலும், மரம், இரும்பு முதலிய பொருள்களைக் கொள்முதல் செய்வதி லும் திருப்பணிக் குழு உறுப்பினர்கள் அயராது பாடுபட்டார் கள்.

செயலாளர் திரு. கிருஷ்ணன் செட்டியாரைத் திருப்பணிக் குழுவின் தந்தை என்று சொன்னால், தந்தைக்கேற்ற தகுதி படைத்த மைந்தர்களாகக் குழு உறுப்பினர்கள் செயல்பட்டார் கள். இவர்கள் யாவரும் ஒரு நல்ல குடும்பமாக அமைந்து சிறிதும் மனவேற்றுமை இல்லாமல் திருத்தொண்டாற்றியுள் ளார்கள். திருப்பணி நடைபெற்ற இந்த இரண்டரை ஆண்டுக்காலத்தில் தங்கள் சொந்த அலுவல்களை மறந்து, சிந்தை செயல் என்ற இரண்டையும் திருப்பணி ஒன்றுக்கே செலவழித்த இப்பெருந்தகையாளர்களை மனமுவந்து பாராட்டி நன்றி செலுத்துகிறோம்.

திருப்பணிக்குழுவில் இடம் பெறுவிட்டாலும் ஒல்லும் வகை யெல்லாம் பல உத்தமர்கள் உதவியிருக்கிறார்கள். பாகனேரி யிலும் அதன் சுற்று வட்டாரங்களிலும் வாழ்பவர்கள் மட்டு மல்ல, பாரதநாட்டின் பல பகுதிகளில் குடியேறியிருப்பவர் கள் கூடத் தங்கள் பக்தியுள்ளத்தைப் பலபடியாக வெளிப்ப டுத்தியிருக்கிறார்கள்.

உதவி புரிந்த உத்தமர்களை இங்கு நன்றியுடன் நினைவு கூர்கிறோம். தேகநலமும், செல்வ வளமும், ஆன்மபலமும் பெற்று இவர்கள் வழி வழி சிறக்க ஸ்ரீ புல்வாய் நாயகியை வேண்டுகிறோம்.



# அம்பிகையைச் சரண்புகுவோம்

எல்லாருக்கும் கைவரக் கூடிய எளிமையான அறங் களேயே திருமூலர் வலியுறுத்துகிருர்.

ஒரு பச்சிலேயை மட்டுமாவது கிள்ளிப்போட்டு, 'சிவாய நம' என்று வணங்குவது எல்லாருக்கும் ஆகும்.

பக்கத்தில் வளர்ந்திருக்கும் பச்சைப்புல்லில் ஒரு கற்றை பறித்து மேயும் பசுவின் வாயில் ஊட்டலாம். இதுவும் எல்லாருக்கும் ஆகும்.

இலேகொள்ளாமல் வகைவகையான உணவுகளேஇட்டு உண்ணு கிருேம். இந்த உணவில் ஒரு பிடியை, ஒரே ஒரு பிடியை வெளி யே நின்று கூவும் பிச்சைக்காரனுக்கு வழங்கலாம். இதுவும் எல்லாருக்கும் ஆகும்.

இந்த மூன்று அறங்களுமே முடியாமல் போனுலும் மற்றவர் களிடம் பேசும்போதாவது இனிமையாகப் பேசலாம். எதிரே இருப்பவன் இதயம் வருந்தாத வார்த்தைகளேக் கூறலாம்.

லராகவும் பொருளாளராகவும் அமைந்தது பாகனேரி செய்த தவப்பயன் என்றே சொல்லவேண்டும். இவர் நற்பணிகளுக்குக் கிள்ளிக்கொடுக்காமல் அள்ளிக் கொடுக்கும் பெருந்தகையாளர். திருத்தேர்த் திருப்பணிக்கும் பெருந்தொகையை நன்கொடையாக வழங்கியிருக்கிறார். ஏற்றுக் கொண்ட பணிகளைச் செம்மையாகவும், முழுமையாகவும், சிறப்பாகவும், நிறைவேற்ற வேண்டுமென்ற கொள்கை உடையவர்.

புகழ்பெற்ற பெரியவர்கள் இது போன்ற பொதுப் பணிகளில் பெரும்பாலும் பெயரளவுக்குத்தான் செயலர், பொருளாளர் போன்ற பதவிகளை வகிப்பார்கள். ஆனால் திரு. கிருஷ்ணன் செட்டியாரவர்களோ பொதுப் பணி என்று ஒருபோதும் அலட்சியம் காட்டியதில்லை. பெரிய மரங்களிலிருந்து சின்னஞ்சிறு ஆணிகள் வாங்குவது வரையில் தாமே கொள்முதல் செய்வார். கடந்த முப்பது மாதங்களாக இவர் கனவிலும் தேர்; நினைவிலும் தேர். திரு. செட்டியாரவர்களின் சிந்தனையோட்டமே தேரோட்டம்தான்! தேரில் அமைந்துள்ள அத்தனை சிற்பங்களும் திரு. செட்டியார் அவர்களின் மேற்பார்வையோடும், அவர்தம் தீர்க்கமான ஆலோசனைகளோடும் உருவாகியுள்ளன. கலைஞர்களையும் தொழிலாளர்களையும் அதட்டினால் ஒருபோதும் வேலை நடவாது, அன்பினால்தான் நடக்கும் என்பதே இவருடைய கொள்கை. தமது பரிவாலும், பாராட்டுவாசகங்களாலும் கலைஞனிடம் உள்ள முழுத்திறமையையும் வெளிக்கொணர்ந்து பயன்படுத்திக் கொள்ளுவது இவருக்கே உரிய தனித்திறமையாகும்.

ஒவ்வொரு சிற்பத்தையும் கூர்ந்து பார்ப்பார். சிற்பத்தில் இன்னும் செழுமை ஏற்றலாம் என்ற எண்ணம் தோன்றினால், ''ஆசாரியாரே! சிற்பம் அழகாகத்தான் உள்ளது ஆனால் முகம் இன்னும் கொஞ்சம் களையாக இருந்தால் மேலும் அழகாக இருக்கும் அல்லவா?'' என்று கேட்பார். சிறிது நேரத்தில் சிற்பத்தில் புது மெருகு ஏறும்; செட்டியார் முகத்திலும் புன்னகை ஒளி வீசும்!

பசிநோக்காது, கண்துஞ்சாது, இரவென்றும், பகலென்றும் பாராது, கொட்டும் மழையையும் கூதல் பனியையும் பொருட்படுத்தாது இந்தத் திருப்பணியை வெற்றிகரமாக நிறைவேற்

றியுள்ள இப்பெருமகனுருக்கு நன்றி சொல்ல வார்த்தைகளே இல்லே. இவர் நெடிது வாழ அம்பிகையை வேண்டுவோம்.

வள்ளுவருக்கு வாசுகியம்மையும், காந்தியடிகளுக்குக் கஸ்தூரி பாவும் வாய்த்ததுபோலத் திரு. கிருஷ்ணன் செட்டியார் அவர்களுக்குத் திருமதி சிகப்பிஆச்சி வாழ்க்கைத்துணே ஆனுர்கள். செட்டியார் ஈடுபட்ட திருப்பணி வேலேகளே உள்ளன்போடு ஆதரித்து ஊக்குவித்த ஆச்சி அவர்களின் ஒத்துழைப்பும் பாராட்டுக்குரியது.

இவர்களின் புதல்வராகிய பொறியாளர் திரு. கி. இராம நாதன், பி. சயி., பி. ஈ. அவர்கள் தந்தையார் தமக்கு நேரடி யாகவும், தபால்-தந்தி-தொலேபேசி மூலமாகவும் இடும் கட்ட ளேகளே உடனடியாக நிறைவேற்றியும், சென்னே அறங்காவ லர் அலுவலகத்தோடு தொடர்பு கொண்டும், கொள்முதல் முதலான பணிகளில் கூர்த்தமதியோடு பங்கேற்றும் உழைத்திருக்கிருர். இவ்வாறே செட்டியாரின் பேரன், பொறியாளர் திரு. இராம. இராமநாதன். பி. ஈ. இவர்களும் பெருந்தொண்டு புரிந்திருக்கிருர்.

திரு.கிருஷ்ணன் செட்டியார்அவர்களின் குடும்பமே திருப்பணி வேலேகளில் பொறுப்பும் விருப்பும் காட்டியுள்ளது. நிதிவசூல் முதலிய எல்லா வேலேகளுக்கும் தங்கள் கார்களே மனமுவந்து கொடுத்திருக்கிருர்கள். இவர்கள் நலன்பல பெற்று நன்கு வாழப் புல்வாய் நாயகியை வேண்டுகிருேம்.

மேதகு கார்த்திகேய மன்னர் அவர்களேத் தலேவராகவும் திரு. அரு. கிருஷ்ணன் செட்டியாரவர்களேச் செயலாளர் — பொருளாளராகவும் கொண்ட திருத்தேர்த் திருப்பணிக் குழுவில் பாகனேரி தந்த பண்பாளர்களான திருவாளர்கள் கரு. வே. சுப்பிரமணியன் செட்டியார், பெரி. அழ. மு. மு அண்ணுமலே செட்டியார், கா. சுப. சு. கதி. காளேயப்ப செட்டி யார், தெ. நா. சொக்கலிங்கம் செட்டியார், வெ. பெரி, பழ மு. காசி விசுவநாதன் செட்டியார், அ. கண. நாச்சியப்ப செட்டியார், உ. சுப்பிரமணியம், பி. திருஞானசம்பந்தம் எம். எல். சி, மு. காளேலிங்கத்தேவர் பி. ஏ. (ஆனர்சு) ஆர். வி.

ளேயும் சிறுகச்சிறுக மறந்து வருகிறோம்; அற உணர்வையும் இழந்து வருகிறோம்.

பாகனேரித் திருத்தேர்விழா அறஉணர்வின் பயனாக விளைவது. அந்த உணர்வை மேலும் விரிவாக்குவது.

அற உணர்வு உண்மையாகவே கால்கொண்டுவிடுமானால் அந்தநிலத்தில் 'அராஜகங்கள்' தலைதூக்க முடியாது.

இந்திய நாட்டில் எத்தனையோ சிக்கல்கள். சில தீர்க்கக் கூடியவை. சில தீர்வு காண அரியவை.

''தமிழா! தெய்வத்தை நம்பு!'' என்றார் மகாகவி பாரதி. நாம் தமிழ் மக்கள். தமிழ்க்கவிஞனை நம்புவோம். அவன் கட்டளையை நம்புவோம். தெய்வத்தை நம்புவோம்.

புல்வாய் நாயகிக்கு ஒரு புதிய தேரைக் காணிக்கையாக்கியிருக்கிறோம். நம் வாழ்க்கைத் தேரையும், ஜீவ - ரதத்தையும் அவளிடமே ஒப்படைப்போம்!

அம்பிகையைச் சரண்புகுவோம்!

அவள் அனைவரையும் காப்பாளாக!

# வாழ்த்துச் செய்திகள்

காஞ்சிகாமகோடி பீடாதிபதி
ஜகத்குரு
**ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்**

மகாசந்நிதானம் சிவகங்கை சமஸ்தானத்தைச் சேர்ந்த பாகனேரி ஸ்ரீ புல்வாய்நாயகி அம்மன் கோவில் புதுத்தேர் வெள்ளோட்டம் நிர்விக்கினமாகவும், சிறப்பாக வும் நடந்து நிலைசேர வேண்டுமென்றும், அடுத்த ரதோத் ஸவம் முதல் தொடர்ந்து சாஸ்வதமாக மேற்படி ரதோத் ஸவம் சிறப்பாய் நடந்து வரவேண்டுமெனவும், மேற்படி ரதத்தைச் செய்யப் பொருளுதவி செய்த சிவகங்கை மகா ராஜா திரு.வேங்கடாசலபதி ராஜாவும், நாட்டார்களும் நகரத் தார்களும் ஸ்ரீ புல்வாய்நாயகி அம்பாளின் பரிபூர்ண அனுக் கிரகத்திற்குப் பாத்திரர்களாகி நீடூழி நற்சுக வாழ்வு வாழ வேண்டுமென ஆசீர்வதிப்பதுடன் "திருத்தேர்த் திருப் பணிச் சிறப்புமலர்" நன்கு வெளிவரவேண்டுமென்றும் ஆசீர்வதித்து அருளிய மந்தராக்ஷதை ஸ்ரீ சாரதா சந்திர மௌளீஸ்வரர் பிரசாதம் இத்துடன் அனுப்பியிருக்கிறது.




உ

குருபாதம்

தருமையாதீனம்
**ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த**
பரமாசாரிய சுவாமிகள் தருமபுரம், மாயூரம் P. O.

6—2—1973

மக்கள் இறைவனை வழிபடும் முறை 'நித்தியம் நைமித்திகம், காமியம்' என மூன்றாகச் சொல்லப்படும். அவற்றுள் நடுவில் உள்ள நைமித்திகமே பல்வகை விழாக்களாகும். இவை நித்தியத்தில் ஏற்படுகின்ற குறைபாடுகளை நீக்கி நிறைவு செய்வன. நித்தியத்தைச் செய்ய இயலாதவர்களையும் இறைவழிபாட்டில் ஈடுபடச் செய்வன நைமித்திகமான விழாக்களே. இது பற்றியே இத்தகைய திருவிழாக்களைத் தரிசித்தல் மண்ணினில் பிறந்தார் பெறும் பயனாகச் சொல்லப்படுகின்றது.

பலவகை விழாக்களில் தேர்த்திருவிழா, நாட்டிலும் நகரத்திலும் உள்ள எத்தகைய மக்களும் ஒருங்கு திரண்டு இறைவனை வழிபட்டுப் பயன் அடைகின்ற பெருஞ் சிறப்பினை உடையது. சிவபெருமானது தேர்த் திருவிழா அவரது முதன்மைச் சிறப்பையும் குறிப்பது.

சிவபிரான் தேவர்களது வேண்டுகோளின்படி திரிபுரத்தை அழிக்கச் சென்றபொழுது தேவர் பலரும் துணைப் பொருள்களாய் அமைத்தனர். பூமி தேரின் தட்டு, சூரிய சந்திரர் சக்கரங்கள், மற்றைய தேவர்கள் தேரின் மற்றைய உறுப்புக்கள், வேதங்கள் குதிரைகள், பிரமன் சாரதி, மேருமலை வில், வாசுகி நாண், திருமால் அம்பு, வாயு அம்பின் சிறகு, அக்கினி அம்பின் முனை இவ்வாறாக அமையச் சிவபெருமானே அவ்வில் அம்புகளைத் தாங்கித் தேர்மீது செல்லும் போர் வீரராய்ப் புறப்பட்டுச் சென்றார். அதுபொழுது இத் தேவர் பலரும், 'நமது துணையாலன்றோ சிவபெருமான் திரிபுரங்களை அழிக்கப் போகின்றார்' என்று நினைத்தனர்.

ஆனால், முடிவில் சிவபெருமான் தமது சிரிப்பினாலேயே திரிபுரம் எரிந்தொழியச் செய்தார். இவ்வரலாறு அசுரத் தன்மை, தேவத் தன்மை என்னும் எந்தத் தன்மையிலும் தனி ஒருவனாயினும், பலர் திரண்ட தொகுதியிலாயினும் அகந்தை என்பது தோன்றினால், இறைவன் அதை அழிக்கின்றான் என்ற உண்மையை விளக்குகின்றது. எனவே, தேர்த்திருவிழா இத்தகைய நலத்தைத் தருகின்ற சிறந்ததொரு விழாவாகும். இவ்விழாவிற்கு முதலாகிய மகாரதத்தைச் செய்வித்தல் மிகச் சிறந்ததொரு சிவபுண்ணியம்.

பாகனேரி ஸ்ரீ புல்வா நாயகி அம்மைக்கு இத்தகைய மகாரதம் ஒன்றை அன்பர்கள் செய்வித்து முதல் விழா எடுப்பதும், அவ்வமையம் விழா மலர் ஒன்று வெளியிடுவதும் மிக்க மகிழ்ச்சிக்கு உரியன. விழா இனிது சிறந்தும், விழாமலர் நன்கு மலர்ந்தும் ஸ்ரீ புல்வா நாயகி அம்மையின் புனிதத் திருவருளை அனைவர்க்கும் நல்க ஸ்ரீ செந்தமிழ்ச் சொக்கர் திருவருளைச் சிந்திக்கின்றோம்

---

பாலகவி
வயிநாகரம் **வே. இராமநாதன் செட்டியார்,**
பாலறுவாயர் நிலையம்,
சம்பந்தர் தெரு, தேவகோட்டை. **8—2—73**

உ

சிவமயம்

அன்புருவாகிய அரும்பெறற் செல்வருக்கு ஆலவாயண்ணல் அருட்பெருக்கினால் எல்லா வளங்களும் எய்துவனவாக. கடிதம் கிடைத்தது, இன்று இங்கு வேறு ஒரு நிகழ்ச்சி உளது. வெள்ளோட்ட விழாச் சிறப்புற நடைபெறுவதாக.

அன்புள்ள
**தத்புருஷதேசிகர்**

**மூ. கண்ணப்பன்**
அறநிலைய அமைச்சர்

தமிழ்நாடு அரசு
தலைமைச் செயலம்
சென்னை-9
6—2—1973

பேரன்புடையீர்,

முகவை மாவட்டம் பாகனேரி திரு புல்வா நாயகியம்மன் திருக்கோயில் சார்பில் அன்மையில் செய்து முடிக்கப்பட்ட திருத்தேர் வெள்ளோட்ட விழா வரும் **8-2-1973** அன்று நடைபெற இருப்பதையும், இவ்விழாவினையொட்டி "திருத்தேர்த் திருப்பணி மலர்" ஒன்று வெளியிட இருப்பதையும் அறிந்து மெத்தவும் மகிழ்ச்சியடைகிறேன். இத் திருப்பணியில் ஈடுபட்டோர் அனைவருக்கும் என் உளமார்ந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்வதோடு விழா சிறப்புற அமையவும் என் நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

அன்புள்ள,
**மூ. கண்ணப்பன்**

---

**அ. பெ. தர்மலிங்கம்**
வேளாண்மைத்துறை அமைச்சர்

தமிழ்நாடு அரசு
தலைமைச் செயலகம்
சென்னை-9

அன்புடையீர்,

பாகனேரி புல்வா நாயகி அம்மனுக்கு இரண்டு இலட்சம் ரூபாய் செலவில் புதிய திருத்தேர் ஒன்று செய்யப் பட்டுள்ளது அறிந்தும், அதன் வெள்ளோட்ட விழா **8—2—1973** அன்று நடைபெறவிருப்பது அறிந்தும் அளவற்ற மகிழ்ச்சி அடைகின்றேன். இத்திருத்தேர் உருவாக கோட்டை நாட்டார்களும், நாட்டுக்கோட்டை நகரத்தார் களும் உதவியுள்ளதால், அவர்களுக்கு என உளமார்ந்த பாரட்டுதல்களைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

திருத்தேர் வெள்ளோட்ட விழாவையொட்டி வெளியிடப்படவிருக்கும் "திருத்தேர் திருப்பணி மலர்" தெய்வீக மணம் பரப்பும் வண்ண நறுமண மலராக அமைய வாழ்த்துகின்றேன்.

தங்கள் அன்புள்ள
**அன்பில் தர்மலிங்கம்**

கி. சந்திரசூடன், ஐ. ஏ. எஸ்.
மாவட்ட ஆட்சித் தலைவர்
இராமநாதபுரம் இருப்பு மதுரை

மதுரை
8—2—1973

அன்புடையீர்,

பாகனேரி ஸ்ரீ புல்வாய்நாயகி அம்மனுக்குத் திருத்தேர் செய்து அதன் வெள்ளோட்ட விழா நடைபெறுவது அறிந்து மிக்க மகிழ்ச்சி. இதற்கான அழைப்பிதழ் கிடைக்கப் பெற்றேன்.

நகரத்தார் பெருமக்களும், வாழ்க்கோட்டை நாட்டார் பெருமக்களும் நீண்ட நெடுங்காலமாக நம் நாட்டிலும் கடல்கடந்தும் செய்துவரும் சமயத் தொண்டும், கல்வித் தொண்டும் போற்றுதற்குரியதாகும். அந்த மரபைக் காக்கும் வகையில் இன்று பாகனேரியில் நிறைவேற்றப்பட்டிருக்கும் இத்திருப்பணி, அருள் வழங்கும் ஸ்ரீ புல்வாய்நாயகி அம்மனுக்குச்சிறந்ததொரு காணிக்கையாகும். நமது கலாச்சாரத்திற்கும் பாரம்பரியத்திற்கும் ஏற்ப எல்லாச் சிறப்புகளுடன் விழா இனிது நிறைறே மனதார வாழ்த்துகிறேன்.

இவ்விழாவையொட்டி வெளிவரவிருக்கும் "திருத்தேர்த் திருப்பணி விழாமலரும் பயனுள்ளதாக அமையுமென நம்புகிறேன், திருப்பணியிலும் விழாவிலும் தொடர்பு கொண்டுள்ள அனைவருக்கும் எனது நல்வாழ்த்துக்கள்.

மாவட்ட ஆட்சித் தலைவர்
கி. சந்திரசூடன்

---

பு. மனோகரன்

247, கீழைமாசி வீதி, மதுரை-1
7th February 1973

Chairman, Board of Trustees,
Sri Dhandayuthapaniswamy Devasthanam,
Palani

Dear Sir,

I thank you very much for your kind invitation for the inaugural function of the NEW KOVIL CAR, to be held on the 8th February, 1973

I wish the function to be a grand one.

With kind regards,

Yours Sincerely,
P. MANOHARAN

# நினைத்துப் பார்க்கிறேன்

இராம. இராமநாதன் எம். எஸ்சி. (டெக்)
பாகனேரி

பக்திப்பயிர் வளர்ப்பதில் பாரில் சிறந்து விளங்குவது நம் பாரத நாடு. இப்பாரதத்தின் உயிர்நாடியை உணரவேண்டுமாயின், நமது தொன்மையான கலாச்சாரத்தின் என்றுமழியாத் தொன்மையை நுகர வேண்டுமாயின் தெற்கில்தான், அதுவும் குறிப்பாகத் தமிழகத்துக்குத்தான் வரவேண்டும். காலத்தால் முற்பட்ட நம் தமிழகம், தமிழினம் கலையாலும், கலையின் சாரத்தாலும், இலக்கியத்தாலும், வீரத்தாலும் என்றுமே முன்னின்றிருக்கிறது. இவைகளை இணைக்கும் ஒரு மெல்லிய ஆனால் உறுதியான பிணைப்பாகப் பக்தி நின்று நிலவி வந்திருக்கின்றது; வருகின்றது.

**திருப்பணி:**

தஞ்சை மண்தான் பக்திப்பயிர் வளர வித்திட்டு நின்றதெனின் தரணி போற்றும் பாண்டிமண் அதற்கு உரமாக நின்று உதவியிருக்கிறது. சரித்திரம் பேசுகிறது: கோவில் யார் கட்டியிருப்பினும் பிற்காலத் திருப்பணிகளில் ஈடுபட்டு நம் பழைய பக்திக் கருவூலங்களாம் திருக்கோவில்களை நின்று நிலைபெற்று நம் நாட்டின் மக்களின் பெருமை சாற்றிப் பக்தர்களுக்கு அருள்பாலிக்கும் வண்ணம் செய்தவர்கள் பெரும்பாலும் பாண்டிநாட்டைக் குறிப்பாக முகவை மாவட்டத்தைச் சேர்ந்தவர்களே என்று. அது பொய்க்கா வண்ணம், திருப்பணிகளில் முன்னிற்கும் உயர்ந்து நிற்கும் தேர்த்திருப்பணி செய்து தலைநிமிர்ந்து நிற்கின்றனர் தெய்வத்திடம் பணிந்து நிற்கும் பாகனேரிவாழ் பெருமக்கள்.

**சக்தி வழிபாடு:**

அர்த்தமுள்ள இந்துமதம் அனைத்துத் தெய்வத்திடமும் நம்பிக்கை கொள்கிறது. இதில்சக்திவழிபாடு ஆரம்பமுதலே இருந்துவந்திருக்கிறது. கேட்டவை தரும் பராசக்தி, மஹிஷாசுர மர்த்தினி, நளினாக்ஷி, நாமசங்கீர்த்தன விதாயினி, முத்தேவரும் முத்தொழிலாற்றிடவே முன்னின்றருளும் முதல்வி, வேதாந்த நிவாசினி, அன்னை பரமேஸ்வரி என்றும் பக்தர்களுக்கு அருள் பாலித்து வந்திருக்கிறாள். பாசம் காட்டின் அன்னையாய்ப் பக்தி செலுத்தின் தேவ தேவியாய் விளங்குபவளும் கானக்கிடையாக் கதியானவளும், கருதக்கிடையாக் கலையானவளும், பூணக்கிடையாப் பொலிவானவளும், புனையக்கிடையாப் புதுமைத்தவளும், நாணித் திருநாமமும்

அவள் துதியும் நாடாதவரை நாடாதவளுமான உலகமாதா தேவி புல்வாய் நாயகி பாகனேரி மக்களையும் மற்ற பக்தர்களையும் என்றுமே காத்து ரட்சித்து வந்திருக்கிருள்; வருகிருள்;வருவாள். இம்மைக்கும் மறுமைக்கும் நல்வழி காட்டும் உலக நாயகியின் அருள் நோக்குக்கு ஆளாகி நிற்பது நம் பாக்கியம். எப்பிறப் பிலும் எய்தொணு இயற்கையான சித்தியை இப்பிறப்பில் நமக் கிசைந்தளிக்கும் தேவிக்கு வண்ணத்தேர் செய்து திருவீதி உலா வலம் செய்து வர வகை செய்திருக்கிருேம்.

**மணித்தேர்:**

தேர்த்திருவிழாவில் பக்தி பரிமளிக்க தெய்வத் திருவீதிஉலாக் கண்டு நிற்கும் அழகே தனிஅழகு. ஆண்டு முழுதும் உழைத்த பெருமக்கள் சிறிது ஓய்வுடன் மகிழ்ச்சியுற்ருக்கவும்,பரம்பொருளை நினைக்கவும் வாய்ப்பளிப்பது திருவிழா போன்ற விழாக்களே யாகும். அவற்றில் தலையானது தேரோட்டம். தொன்று தொட்டு நடந்து வரும் இப்பழக்கம் இடையில் பழைய தேரின் நிலைமை யைக் கருதி நின்று விடுமோ என்று சில வருடங்களுக்கு முன் னர் உதித்தது உண்மை.

பொருள் நாடுமிவ்வுலகில் (materialistic) உட்பொருள் நாடா இவ்வுலகில் (unrealistic) பொதுநலம் பேணச் சில நல்லவர்கள் இருக்கத் தான் இருக்கிருர்கள். பாகனேரி நகர் அதிர்ஷ்டவசமாக இத்தகைய நல்லோர் நிறைந்து இருக்கிறது. அத்தகைய நல் லோர்களும் வல்லோர்களும் இணைந்து செய்த பெருமுயற்சியின் வெற்றிச் சின்னமாக இன்று நிற்கிறது இந்த மணித்தேர்.

**ஆக்கப்பணி:**

இப்பகுதியிலேயே பல வழிகளில் முன்னின்றிருக்கிறது இவ்வூர். மிகப்பழைய அஞ்சலகம்; நிமிர்ந்து நிற்கும் நூலகம்; கிராமமாயி னும் தெருவில் குழல் விளக்குகள்;குழாய் மூலம் குடிநீர் விநியோ கம் (UC); பஞ்சாயத்துக்கு எதிர்ப்பின்றித் தேர்தல்; அரசியலில் முன்னிற்பு; ஊருக்கு வெளியே தொழில்களில் கண்ட பலப்பல வெற்றிகள்;மோட்டார்த் தொழில்;மற்றும்இயந்திரவியல்கள் நூல் வெளியீடு, வங்கித்தொழில், சினிமாத்துறை, தேயிலை, காப்பித் தோட்டம் இன்னோரன்ன பிறவற்றில் முதலீடு செய்து கண்ட வெற்றிகள் பாகனேரி இளைஞர்கள் படிப்பில் பெற்றிருக்கும் பறக் கும் வண்ணங்கள் இன்னும் தனித்துச் சொல்ல எண்ணிலடங் காக் குறிப்பிட விடுபட்ட குறிப்பிடத் தக்கவை பலப் பல. இன்றே புதிய தேர்.இவை பாகனேரிப் பெரியவர்களின், இளைஞர்களின் ஊக்கமிக்க ஆக்கப் பணிக்கு நல்லதோர் சான்றுகளாகும்.

இன்றுஇவ்வூர்மக்களின் ஆக்கப் பணி,ஒருமுகப்பட்ட ஆக்கப்பணி (Concentrated effort for constructive work) வெற்றி கண்டு மகிழ்ந்து நிற்கிறது. திருப்பணி என்பது தேருடன் நின்று விடுவதில்லை. திரு என்றால் செல்வம் நல்வாழ்வு எல்லாம் அடங்கும் (Philanthropy). கல்விச்செல்வம், பொருட்செல்வம் போன்ற எல்லாச் செல்வங்களும் இணையின் நல்வாழ்வுதான் மலரும். பக்தியின் உயிரிழையில் இணைக்கப்பட்ட பாகனேரிநகருக்கு அன்னையின் அருளால் எல்லா முயற்சிகளிலும் வெற்றி நிச்சயம் கிட்டும். இன்று ஒரு நோக்கில் ஈடுபடுத்தப்பட்ட ஆக்கவுணர்ச்சி தொடர்ந்து இவ்வூருக்கு ஆசிரியப் பயிற்சிப் பள்ளி, கல்லூரி, ஓரிரு தொழிலகங்கள் கூட்டுப் பண்ணை இன்னபிற இன்றியமையாதனவும் ஏற்பட்டு வளர ஏதுவாகின் மகிழ்ச்சியடையார் யார் தான் உளர்? வளர்ந்து வரும் இவ்வூர் ஒரு 'மாதிரி கிராமம்' (Model village) ஆக உருப்பெற்றால் ஆங்காங்கே அரசு தரும் உதவி கொண்டு ஊர் மக்களின் பணிகண்டு உருப்பெற்றால், காந்தி கண்ட கிராம ராஜ்யத்தின் ஒரு அங்கம் நிச்சயம் எழில் பெறுமன்றோ? ஐயா அவர்களின் (திரு. அரு. கி. கிருஷ்ணன் செட்டியார்) ஊக்கமிக்க பணியைப் போற்றார் இலர். ஸ்ரீ ஏழை காத்தம்மன் கோவில் திருப்பணியிலும் அவர்கள்தம் பங்கு அளவிடற்கரியது. எடுத்த காரியம் வெற்றி பெறும் வரை உடலயராக் கண்துஞ்சா நம் ஐயா அவர்களைப் பாராட்ட இச் சிறுவனுக்கு வயதுத் தடை இருப்பினும் ஊர் இளைய சமுதாயத்தின் சார்பில் நன்றி சொல்ல, அணிலின் பங்கைக் காட்டத் தடையேதுமில்லையே? அவர்கள் நினைத்தால் பாகனேரி ஒரு மாடல் கிராமமாக நிச்சயம் உருவாகும். ஐயா என்பது இங்கு அவர்களை மட்டும் குறிப்பிட்டாலும் ஊரிலுள்ள அனைத்துப் பெரியவர்களும் நம் 'ஐயா'க்கள் தானே? பெரியோர் இணைந்து இளைஞர்க்கு வழிகாட்டின், இளைஞர் தம் உழைப்பை நல்கின், நம்மக்கள் வெளியே செல்லத் தேவையின்றித் தம்முழைப்பை இங்கேயே நல்கின் எதிர்காலம் நிச்சயமாக இனிமையாக அமையுந்தானே?

சித்திரத்தேர் கண்டு மகிழ்ந்து அது தந்த எதிர்காலச் சிந்தனையுடன் தேவியின் சந்நிதியில் சென்று வணங்குகிறோம். பணிந்து நிற்கிறோம். வேதங்கள் நான்கும், புராணங்கள் ஏழும், திசைகள் எட்டும், தொழுதேத்தும் ஞானத்தலைவியாய், புனித குண்டலியாய், வாலையாய், மாகாளியாய், சாரதையாய், சங்கரியாய், சாம்பவியாய், பகவதியாய், கௌரியாய், கருமாரியாய், கண்ணுடைய நாயகியாய், கொப்புடை அம்மனுமாய், ஏழைகாத்தம்மனாய், புல்வாய் நாயகியாய் ஐந்தொழிலியற்றும் அன்னை அருட்கரம் காட்டிச் சிரிக்கின்றாள். அத்தேவதேவியின் திருவடி பற்றி எழுகிறோம். நம் ஊனும் உயிரும் புல்லரித்துப் பொங்குகிறது. இத்தொல்லை சேர் உலகில் இனி வல்வினையும் வந்துற்ற துயரும் இல்லை இல்லை என எக்களித்து எழுகிறோம்! • O

